

# ராகுல் சாங்கிருத்யாயன்

பிரபாகர் மாச்வே



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்தகர் மூவர் விளக்குகின்றனர். அவர் களுக்குக் கீழே அமர்ந்து இந்த விளக்கத்தை எழுது கிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக் கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

*நாகார்ஜுன மலைச் சிற்பம்—(கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.)*
*பட உதவி: நேஷனல் மியூஸியம், புது டில்லி.*

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# ராகுல் சாங்கிருத்யாயன்

ஆங்கில மூலம்:
பிரபாகர் மாச்வே

தமிழாக்கம்:
வல்லிக்கண்ணன்



சாகித்திய அக்காதெமி

*Rahul Sankrityayan*—Tamil translation by Vallikkannan of Prabhakar Machwe's English monograph. Sahitya Akademi, New Delhi (1986) Rs. 5.


முதல் வெளியீடு: 1986

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:

ரவீந்திரபவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001

கிளை அலுவலகங்கள்:

29, எல்டாம்ஸ் சாலை, தேனும்பேட்டை, சென்னை 600 018

பிளாக் V–B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029

172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் 400 014

அச்சிட்டோர்: டயோசிசன் அச்சகம், சென்னை 600 007

# உள்ளடக்கம்

| | பக்கம் |
|---|---|
| அறிமுகம் | .. 7 |
| வாழ்க்கை | .. 13 |
| படைப்புகள் | .. 36 |
| இலக்கிய சாதனைகள் | .. 47 |
| அனுபந்தம் 1<br>ராகுல் வாழ்க்கையின் முக்கிய நிகழ்ச்சிகள் | .. 65 |
| அனுபந்தம் 2<br>ராகுல் சாங்கிருத்யாயன் படைப்புகள் | .. 67 |

# அறிமுகம்

மகாபண்டிதர் ராகுல் சாங்கிருத்யாயனின் வாழ்க்கையும்படைப்புகளும், அவருடைய வரலாற்றை எழுத முனையும் எந்த எழுத்தாளருக்கும் ஒரு அறைகூவலாகவும் கடினமான காரியமாகவுமே இருக்கின்றன. இதற்கான முதற்காரணம் அவரைப்பற்றிய முழுமையான நல்ல நூல், இந்தி மொழியில்கூட, இல்லை. இது ஒரு காரணம். அவருடைய படைப்புகள் பன்முகப் பட்டவையாகவும் மிகப் பரந்தனவாகவும் உள்ளன; மற்றொரு காரணம் அவரது சாதனைகளின் சகல தன்மைகளையும் விரிவாக எடுத்துரைப்பது என்பது சாத்தியமற்றது ஆகும். உதாரணமாக, எனது வாழ்க்கைப் பயணம் 'மேரி ஜீவன் யாத்ரா' என்ற அவருடைய சுயசரிதையை எடுத்துக்கொள்வோம். அதன் இரண்டு பாகங்கள் 1944-லும் 1950-லும் வெளி வந்தன; முதல் பாகம் 564 பக்கங்களும் இரண்டாம் பாகம் 783 பக்கங்களும் கொண்டவை. இவையிரண்டுமே மறு பிரசுரமும் பெறவில்லை. அவரது சுறுசுறுப்பான வாழ்வில் 1944 முடிய நிகழ்ந்தவற்றை மட்டுமே அவை கூறுகின்றன. மூன்று பாகங்கள் அவர் இறந்த பிறகு வெளிவந்தன. அவைகூட அவருடைய வாழ்க்கையின் கடைசிப் பகுதியை விவரிக்கவில்லை. எண்ணற்ற டயரிக் குறிப்புகள் இன்னும் பிரசுரமாகாமலே இருக்கின்றன. எனவே, அவரைப்பற்றி அவரே எழுதியுள்ள இந்த மூவாயிரம் பக்கங்களையும் ஒருவர் ஒரு அத்தியாயம் என்ற குறுகிய அளவில் சுருக்கித் தருவதென்றால் அது சும்மா மேலோட்டமானதாகவே அமையும். அவரது ஏனைய படைப்புகளுக்கும் இது பொருந்தும். அவை, அனுபந்தத்தில் குறிப்பிட்டுள்ளபடி 125 ஆகும்; இந்தி, சம்ஸ்கிருதம், பாலி, திபெத், போஜ்புரி ஆகிய ஐந்து மொழிகளில் அவை எழுதப்பட்டிருக்கின்றன. தத்துவம், வரலாறு, சமூகவியல், அறிவியல், பயணநூல், வாழ்க்கை வரலாறு கற்பனைப்படைப்பு, நாடகம், கட்டுரை, அகராதி, இலக்கணம், மூல நூல்களைப் பதிப்பித்தல், ஆய்வு, திபெத் இயல், புத்த சமயம், நாட்டுப்புற இலக்கியம், அரசியல், துண்டுப்பிரசுரப் பிரசாரம் ஆகிய விஷயங்களை அவை கொண்டுள்ளன. அவருடைய பிரசுரங்கள் பலதரப்பட்டவையாகும்: மொழிபெயர்ப்புகள், திபெத் மொழி மற்றும் சம்ஸ்கிருதத்திற்கான ஆரம்பப் பாட

நூல்கள் முதல், புத்தமத தர்க்கம்பற்றி தர்மகீர்த்தி எழுதிய நூலுக்கு விளக்கவுரை போன்ற ஆழ்ந்த, மதிப்பு வாய்ந்த விஷயங்கள் அவற்றில் காணப்படுகின்றன. அவரது இலக்கிய சாதனையின் தன்மையும் ஒரே மாதிரியானது அல்ல. அசாதாரணப் பண்டிதரும், அயர்விலாது சுற்றித்திரிபவரும், சமூக சீர்திருத்த வாதியுமான இந்த மனிதரின் மொத்தப் படைப்புகளும் முதலில் பெரும் திகைப்பையே ஏற்படுத்தும். முறையான படிப்பு பெற்றிராத ஒருவர், அமர்ந்து வேலை செய்வதற்கென நிலையான ஒரு இடம் இல்லாதவர், பெயர்களையும் மதப் பற்றுக்களையும் அடிக்கடி மாற்றிக்கொண்டிருந்தவர், 'அறிவை, தலையை அழுத்தும் சுமையாகக் கொள்ளாது, சிறு பயணத்துக்குப் பயன்படுத்துகிற ஒரு படகுபோல்' கருதியவர்—இது புத்தரின் வாசகங்களில் ஒன்று; இதைத் தனது வழிகாட்டும் ஒருகொள்கை என அவர் தன்னுடைய சரிதையில் குறிப்பிடுகிறார்—பன்மொழிப் புலவரும் உலக யாத்திரிகருமான அவர், எப்படி இவ்வளவு எழுத முடிந்தது என்று நம்மை அதிசயிக்க வைக்கிறது. அதிலும், திபெத் போன்ற தடை விதிக்கப்பட்ட நாடுகளுக்கு மேற்கொண்ட கடினப் பயணங்கள் தந்த சிரமங்கள், மற்றும் தேசிய விடுதலை இயக்க அரசியல் போராட்டத்தில் ஈடுபட்டு அனுபவித்த சிறைத் தண்டனைகள் இவற்றுக்கிடையிலும் அவர் இதை சாதித்திருக்கிறார். சுய முயற்சியால் முன்னுக்கு வந்த இந்த மனிதரைப்பற்றி மேலும் மேலும் அறிகிறபோது, அவருடைய அறிவுக்கூர்மை, துன்பங்களைத் தாங்கிக்கொள்ளும் சக்தி, புதிய விஷயங்களைக் கற்கும் ஆர்வம், விவேகபூர்வமான சுதந்திரப்போக்கு ஆகியவற்றை நாம் அதிகம் வியக்க நேர்கிறது. சோர்வின்மையும் துணிச்சலும் பெற்ற ஒரு முன்னோடி தீவிரமான ஞாபகமறதி நோய்க்கு உட்பட்டு இறந்தார் என்பது பரிதாபத்துக்குரியது. அவர் 1963-ல் இறந்துவிட்ட பிறகுகூட அவரைப்பற்றி அதிகமாக எதுவும் எழுதப்படவில்லை. அச்சந்தர்ப்பத்தில் உணர்ச்சிமயமான இரங்கல் குறிப்புகள்தான் வெளிவந்தன. பரோடா பல்கலைக் கழகத்தின் காலாண்டு வெளியீட்டில் டாக்டர் வாசுதேவசரண் அகர்வால் எழுதியுள்ள ஆங்கிலக் கட்டுரை ஒன்று மட்டுமே குறிப்பிடத் தகுந்தது ஆகும்.

ராகுலின் ஆளுமையும், அவரது சாதனைகள் போலவே, மனதில் பதியக்கூடியது; மறக்கமுடியாதது. விலைமதிப்பிற்குரிய எழுத்துப் பிரதிகள், ஓவியங்கள், மற்றும் அபூர்வ நூல்களோடு திபெத்திலிருந்து ராகுல் திரும்பிவந்த சமயம், பிரசித்திபெற்ற வரலாற்று ஆசிரியரான காலம்சென்ற காசிபிரசாத் ஜெய்ஸ்வால் அவரைப்பற்றி 'மாடர்ன் ரெவ்யூ'வில் ஒரு கட்டுரை எழுதினார். அதில் அவர் ராகுலை, அவரது தோற்றப் பொலிவைப் பொறுத்த மட்டில், புத்தரோடு ஒப்பிட்டார். 'அவர் ஆறு அடி உயரம்

இருந்தார். அகன்ற நெற்றி. விசாலமான மார்பு. திரண்ட தோள்கள். இவற்ருேடு அவர் ஒரு புராதன ஆரியன் மாதிரித் தோற்றம் கொண்டிருந்தார். கீர்த்திபெற்ற கீழ்திசை அறிஞருக்கு அவருடைய தோற்றம் புத்த பெருமானின் ஒளிமயமான தரிசனத்தை நினைவூட்டும்' என்று அம்ருத்ராய் எழுதினுர். ராகுலின் அருள் நிறைந்த, உயர்வான, உடல் அமைப்புபற்றி எழுதும் போது, அநேக இந்தி எழுத்தாளர்கள், 'தூண்' (பகவத்சரண் உபாத்யாயா), 'ஆலமரம்' (தாகூர் பிரசாத் சிங்), 'இமாசலத்துக் கும் அப்பால் சென்று, அம்மலைத் தொடர்களில் ஒன்றே ஆகிவிட்ட இமயத்தின் காதலர்' (வித்யாநிவாஸ் மிஸ்ரா) என்றெல்லாம் உவமித்து எழுதியிருக்கிருர்கள். அவருடைய அறிவு மற்றும் இதயத்தின் தன்மைகள் சமமாகவே மனதிற் பதியக்கூடியவை. அவர் சுதந்திரமான மனிதாபிமானியாகவும், விட்டுக்கொடுக்காத புரட்சிவாதியாகவும் இருந்தார்.

உத்தரப் பிரதேசத்தில், அஜாம்கார் மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூரில், சநாதன சரயுபரிண பிராமண குடும்பம் ஒன்றில் அவர் பிறந்தார். சிறுவனுக இருந்தபோதே வேலையையும் அறிவை யும் தேடி அவர் வீட்டை விட்டு ஓடிப்போனுர். கேதார்நாத் பாண்டே என்பது அவரது பூர்வீகப் பெயர். அவர் காசியில் சம்ஸ்கிருதம், அரபு, பர்சிய மொழிகளை மரபு ரீதியாகக் கற்ருர். ஆனுல் அவர் அறிந்த இதர முப்பது மொழிகளையும் தானுகவே படித்துக்கொண்டார். தனது பெயரை பாபாராம் உதார் தாஸ் என்று மாற்றினுர்; சுற்றித்திரியும் யாசகர் ஆனுர். புராதன சநாதன இந்துமத நம்பிக்கையை விடுத்து ஆர்ய சமாஜத்தில் சேர்ந்தார். ஆர்யசமாஜத்தின் வேதக் கொள்கைப் பிடிப்பில் அதிருப்தி அடைந்து, அவர் மஞ்சள் ஆடை தரித்து, முறையான புத்தபிக்கு ஆனுர். நேப்பாளத்திலும் ஸ்ரீலங்காவிலும் சுற்றுப் பயணங்கள் செய்த பின்னர் இது நிகழ்ந்தது. பாலி, சிங்களம், திபெத் மொழிகளில் உள்ள புத்த கிரந்தங்களைக் கற்றுத் தேர்ந் தார். மகா பண்டிதர், திரிபீடகாச் சார்யா (தேரவாதப் பிரிவைச் சேர்ந்த புத்தமதப் புனித நூல்களான மூன்று பீடகங்களை யும் நன்கு கற்றவர்) என்ற பட்டங்களைப் பெற்ருர். இது அவரை லாமாக்களின் நாட்டிற்கு அபாயகரமான யாத்திரை போகும்படி தூண்டியது. அங்கு அவர் தமது உயிரைப் பணயம் வைத்து, ஊமை சாதுவாக வாழ்ந்து, திபெத் மொழியைக் கற்ருர். அவர் ஒரு புத்த சமயவாதியாக ஐரோப்பாவுக்கும் போனுர். இந்திய இயலாளர் பலரை அங்கே கண்டார். ஆயினும் ஐரோப்பா அவரை வசீகரிக்கவில்லை. பௌத்த சமயப் பிரசாரம் பண்ணுவதற்காக அமெரிக்கா போகலாம் என்ற அழைப்பையும் அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

அவரது வாழ்வின் இந்தக் கட்டத்தில் மார்க்சிஸம் அவரை வெகுவாக ஈர்த்தது. 1935-ல் முதன் முறையாக சோவியத் ரஷ்யாவுக்குப் போய்வந்த பிறகு அவர் தீவிர சோஷலிச ஆதர வாளர் ஆகிவிட்டார். கிசான் சபை மற்றும் இந்திய தேசிய காங்கிரசில் சேர்ந்து தீவிர அரசியல்வாதியானுர். அவர் மேலும் மூன்று தடவைகள், 1937, 1944,1962-ம் வருடங்களில், சோவியத் ரஷ்யா சென்றுர். துரதிர்ஷ்டவசமாக, அவர் தனது ஞாபக சக்தியை இழந்துவிட்ட பிறகு, கடைசித் தடவையாக சோவியத் ரஷ்யாவுக்கு வைத்திய சிகிச்சைக்காகப் போனுர். குணம்பெருமலே திரும்பி வந்தார். அவர் மாங்கிரில் 1939 அக்டோபர் 19-ல் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர் ஆனுர்; ஒன்பது வருடங்கள் கம்யூனிஸ்டாக இருந்தார். 1948 ஜனவரியில், பம்பாயில் இந்தி சாகித்ய சம்மேளனத்தில் அவர் நிகழ்த்திய தலைமை உரை காரண மாக, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அவருடைய உறுப்பினர் பதவியை ரத்து செய்தது. அவர் சதா அறிவின் ஒரு பீடத்திலிருந்து மற்ருெரு இடத்துக்கு, ஒரு வகையான நம்பிக்கைகளிலிருந்து இன்னெருு வகைக்கு என்று சஞ்சாரம் செய்து வந்தார். மனித குலத்தை துன்ப துயரங்களிலிருந்து மீட்கும் வழியைத் தேடித் திரியும் அமைதியற்ற ஆத்மாவாகவே அவர் இருந்தார்.

அவருக்கு பத்து வயதுகூட ஆகியிராத சமயம், 1903-ல் அவர் சொந்த ஊரை விட்டு இரகசியமாக வெளியேறி பனுரஸ் (காசி) போனுர. 1907லும் 1909லும் வேலே தேடியும், சுயபலத்தில் வளரவேண்டும் என்றும் அவர் கல்கத்தா போனுர். 1910-ல் அவர் தனது முறையான யாத்திரைகளேத் தொடங்கினுர். இமயமலேயை இலட்சியமாகக்கொண்டு, முதலில் சந்நியாசிகளின் கோஷ்டி யோடு போனுர். பிறகு தனியாகச் சென்றுர். பிறகு, அடுத்த பதிமூன்று வருடங்கள் அவர் இந்தியா முழுவதும் சுற்றினுர். காசி, பராஸா, திருமிஷி, திருப்பதி, காஞ்சீபுரம், பெங்களூர், விஜய நகரம், திரியம்பகம், உஜ்ஜயினி, அகமதாபாத், அயோத்தி, ஆக்ரா, லாகூர், குடகு என்று பலப்பல ஊர்களுக்கும் நகரங்களுக் கும் போனுர். 1926-ல் அவர் மீண்டும் இமயமலேக்கு, திபெத்துக்கு, புஷாஹர் மாநிலம், ஸம்நாம், காநாம், ஸ்பிதி மற்றும் தொலே தூர இடங்களுக்குச் சென்றுர்.

ராகுலின் அயல் நாட்டுப் பயணங்கள் 1923-ல் தொடங்கின. அவரது முதல் பயணம் நேப்பாளத்துக்கு. 1927-ல் ஸ்ரீலங்கா போனுர். 1930-ல் அவர் தனது பெயரை ராம் உதார் தாஸ் என்பதிலிருந்து முறையான பௌத்தப் பெயர் ஒன்றுக்கு — ராகுல் சாங்கிருத்யாயன் என்று மாற்றிக்கொண்டார். அது கடைசி வரை நிலேத்துவிட்டது. அவர் திபெத்துக்கு நான்கு முறைகள்

போனர். இப் பயணங்கள் மிகக் கடுமையானவை, பயங்கரமானவை; ஆயினும் ரொம்பவும் மனசுக்குப் பிடித்தவை, பயனுள்ளவை என்று அவர் தனது பயண நூல்களில் குறிப்பிட்டிருக்கிறர். 1932-ல் அவர் ஐரோப்பா சென்றார்; அங்கே பிரான்ஸ், ஜெர்மனி, இங்கிலாந்து மக்களின் வாழ்க்கையைக் கண்டறிந்தார். சோவியத் ரஷ்யாவில், லெனின்கிராட் பல்கலைக் கழகத்தில் அவர் கற்றுக்கொடுத்தார். ரஷ்யாவைச் சேர்ந்த மத்திய ஆசிய சோவியத்துகளைப் பற்றிய ஒரு விசேஷ ஆய்வை அவர் மேற்கொண்டார். பின்னர் அவர் மத்திய ஆசிய வரலாறு பற்றிய பெரிய நூலை இயற்றினர். மத்ய ஆசியா கா இதிஹாஸ் என்ற அந்த நூல் இரண்டு பாகங்கள் கொண்டது. அது 1958-ல் இந்தி மொழிக்கான சாகித்திய அகாடமிப் பரிசைப் பெற்றது. ராகுல், மத்திய மற்றும் தூரகிழக்குப் பகுதிகளில் உள்ள பல்வேறு நாடுகளுக்கும் பயணம் செய்தார். ஜப்பான், கொரியா, ஈரான், சீனு ஆகியவற்றுக்குப் போனர். 1907 முதல் 1963-ல் அவரது மரணம் வரை, அவருடைய வாழ்க்கை இடைவிடாத பயணங்களின் கதையேயாகும். அதிலிருந்து அவர் ஒரு தத்துவம் அமைத்து, 'ஊர்சுற்றிகளுக்கான சாஸ்திரம்'—கூமாக்கார் சாஸ்த்ரா என்ற நூலை எழுதினர். அமைதியான இல்லற வாழ்க்கை என்று அவர் ஒன்றிரு வருடங்கள்கூடக் கழித்திருக்கமாட்டார். முதலில், அவர் லெனின்கிராடில் மங்கோலிய அறிவாளியான லோலா (எல்லன் ஸ்மெர்தோல்ஞ சாங்கிருத்யாயன்) என்பவரை மணந்தார். இகார் என்ற மகன் பிறந்தான். ஸ்டாலின் ஆட்சி காலத்தில் தாயோ, மகனோ இந்தியாவுக்கு வந்து ராகுலுடன் வசிப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை. பின்னர், அவர் இந்திய நேபாளப் பெண்மணி ஒருவரை மணம் புரிந்தார். கமலா பெரியார் என்ற டாக்டர் கமலா சாங்கிருத்யாயனும் அவரும் மசூரியில் சில வருடங்கள் தாம்பத்திய வாழ்க்கை நடத்தினர். ஜெயா என்ற ஒரு மகளும் ஜேடா என்ற ஒரு மகனும் பிறந்தபின், ஸ்ரீலங்கா வித்யாலங்கார பல்கலைக் கழகம், பௌத்த சமயப் பேராசிரியர் ஆகப் பணிபுரிவதற்கு அவரை அழைத்தது. அங்கே அவர் கடுமையாக நோய்வாய்ப்பட்டார். நீரிழிவு, உயர் இரத்த அழுத்தம், இதய நோய் தாக்கி, மிகை உழைப்பு உழைத்திருந்த உடலின் ஆரோக்கியத்தை வெகுவாக பாதித்தன. ஏற்கெனவே குறிப்பிட்டபடி, அவர் தனது ஞாபகசக்தியை இழந்தார். கடைசி இரண்டு வருட காலமும் நினைவற்ற நிலையிலேயே இருந்தார். 1963-ல் டார்ஜிலிங்கில் உயிர் துறந்தார். அவர் தகனம் செய்யப்பட்ட இடத்தில் ஒரு சிறு நினைவுச் சின்னம் இருக்கிறது.

ஆரம்பப் பள்ளியில் அவர் உருது கற்றுக்கொண்டிருந்த காலத்தில், நவஜிந்தா பஜிந்தா எழுதிய குத்ராய் கா நதிஜா என்ற

கதையில் உள்ள கீழ்க்கண்ட இரண்டு வரிகள் அவருடைய இளம் கற்பனையைக் கவர்ந்தன:

ஸாயிர் கர் துனியா கி காஃபில் ஜிந்தகானி ஃபிர் கஹான்
ஜிந்தகி கர் குச் ரஹி தோ நவ்ஜவானி ஃபிர் கான்.

(ஓ அறிவிலிகாள், சோம்பேறிகளே, புறப்படுங்கள், பரந்த உலகம் முழுவதும் சுற்றி வாருங்கள். இதற்காக உங்களுக்கு இன்னொரு வாழ்வு கிடைக்கப்போவதில்லை. நீங்கள் நெடுநாள் வாழ்ந்தாலும்கூட, இந்த இளமை உங்களுக்கு மீண்டும் வரப் போவதில்லை.)

எனவே ஒரே இடத்தில் நிலையாக இருக்க வேண்டாம், சதா திரிந்துகொண்டே இரு — இதுதான் அவருடைய வாழ்வின் நோக்கமாயிற்று. இந்தப் பிரயாண அரிப்பு உண்மையிலேயே ராகுலின் ஆளுமையை உந்தியது — மந்தமான அமைதியான குடும்பஸ்தனின் வாழ்க்கையை நடத்தவிடாதபடி அவருக்குள்ளிருந்து அவரைத் தூண்டுகிற ஒரு சக்தியாயிற்று. அவர் எப்பொழுதும், ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு, ஒரு கண்டத்திலிருந்து மற்றொரு கண்டத்துக்கு, ஒரு மொழிப் பிரதேசத்திலிருந்து வேறு மொழிப் பிரதேசத்துக்கு, மனிதத் தேடலின் ஒரு துறையிலிருந்து மறுதுறைக்கு சஞ்சரித்தவாறு இருந்தார். எதையும் சேகரம் செய்வதிலோ நிலையாகச் சேர்த்து வைப்பதிலோ அவருக்கு ஒரு போதும் நம்பிக்கை இருந்ததில்லை. அறிவைத் தேடுவதே அவரது தணிக்கமுடியாத தாகமாக இருந்தது.

இந் நூலாசிரியர், 1948ல், அலகாபாத் இந்தி சாகித்திய சம்மேளனத்தில், அவரோடு சேர்ந்து, 16,000 வார்த்தைகள் கொண்ட காரிய நிர்வாகத்திற்கான பதங்களை விளக்கும் ஆங்கில இந்தி அகராதியைத் தயாரிப்பதில் பணியாற்றினார். அப்போது ஒருசமயம் யாரோ ஒருவர், அவருடைய அவசர வேலையையும் அதனால் ஏற்படும் அரைகுறை விளைவையும் குறை கூறினார். எதையும் குறைவறச் செய்ய வேண்டும் என்பது பற்றி அந்த கனவான் கூறிய உபதேச மொழிகளை ராகுல் பொறுமையுடன் கேட்டிருந்தார். பிறகு புன்முறுவலோடு, தனக்கே உரிய தனித்தன்மையில் சொன்னார்: "எதுவும் நிலையானது அல்ல; அனைத்தும் அநித்தியமானதே 'ஸப்பம் கானிகம்' என்று புத்தர் சொல்லியிருக்கிறார். 'எதுவும் முடிவானது இல்லை' என்று லெனினும் கூறியுள்ளார். எந்த மனிதனும் பூரணமாக இருப்பான் என்று நான் நம்பவில்லை. உண்மையின் சர்வ உரிமையையும் நான் பெற்றிருக்கவில்லை. என்னாலானதை நான் செய்கிறேன். வரும் தலைமுறையினர் என்னைவிட முன்னேறிச் செயல் புரியட்டும்." மறக்க முடியாத இவ்வார்த்தைகள், ராகுல் எவ்வாறு தனது வரையறைகளைத் தானே உணர்ந்திருந்தார் என்பதை நினைவுபடுத்துகின்றன.

# வாழ்க்கை

ராகுல், கேதார்நாத் பாண்டேயாக 1893 ஏப்ரல் 9-ம் நாளில் பிறந்தார். அவர் தந்தை கோவர்தன் பாண்டே மதப் பற்று கொண்ட ஒரு விவசாயி, குறைவான வசதிகளே பெற்றிருந்தார். அவருடைய தாயார் குலவந்தி தன் பெற்றோர்களுடன் பாண்டகா கிராமத்தில் வசிப்பது வழக்கம். அங்குதான் கேதார் பிறந்தார். அவருடைய தாய் இருபத்தெட்டாவது வயதிலும், தந்தை நாற்பத்தைந்தாவது வயதிலும் இறந்துவிட்டனர். எனவே, ராகுல் அவருடைய பாசம் மிகுந்த பாட்டியால் வளர்க்கப் பட்டார். அவருடைய ஆரம்பகால நினைவுகள், அவர் குறித்து வைத்திருக்கிறபடி 1897-ம் வருடத்திய கொடிய பஞ்சமே ஆகும்.

1898 நவம்பரில் அவர் மதார்ஸா என்று அழைக்கப்பட்ட ஒரு ஆரம்பப் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அங்கு தான் உருது எழுத்துக்களுடன் அவருக்கு அறிமுகம் ஏற்பட்டது. விளையாட்டு களில் அவர் திறமை காட்டவில்லை என்பதை அவரே ஒப்புக்கொள் கிறார். சையத்ஷியா முஸ்லிம்கள் அவருடைய பள்ளித் தோழர் களாக இருந்தனர். அவரது ஆரம்பகால ஆசிரியர்களில், ராணிஸாராய் கீழ்நிலை ஆரம்பப் பள்ளியின் பாபு பத்தார் சிங் என்பவரை நினைவுகூர்கிறார். அந்த ஆசிரியர் மாணவர்களை ஈவு இரக்கம் இல்லாமல் அடிப்பது வழக்கம். ராகுல் தன் சுயசரிதை யின் முதல் பாகத்தில் அனுபந்தம் எண் 2-ல், தனது குல முறை மையையும் கோத்திரத்தையும் பற்றி, வேத காலம் முதல் விசித் திரசித்தம் பெற்றிருந்த தாத்தா ராம்சரண் பதக் காலம்வரை விரிவாக ஐம்பது பக்கங்கள் எழுதியிருக்கிறார். தன் தந்தையைப் பற்றியும் அவர் நகைச் சுவையுடன் எழுதியிருக்கிறார். ஊர் சுற்றும் மகனை அவர் துரத்திய விவரத்தை சுவையாக வர்ணித் திருக்கிறார். ராகுலின் தாயும், அவருடைய ஒரே சகோதரியும், அவரது பச்சிளம் பருவத்தில் இறந்து போயினர். ராகுலுக்கு மிகச் சிறு வயதில் கல்யாணம் நடைபெற்றது. ஆனால் அவர் தனது முதல் மனைவியைப் பார்த்ததே இல்லை. அவர் ஒன்பது வயதுச் சிறுவனாக இருந்தபோதே, பனாரஸ் போவதற்காக, வீட்டைவிட்டு வெளியேறினார். பதினாலாவது வயதில் கல்கத்தா செல்ல

வீட்டைத் துறந்தார். அவர் வீட்டை விட்டு ஓடிப்போனதற்கான காரணங்கள் தெளிவாக இல்லை. பரந்த உலகத்தைப் பார்க்க வேண்டும், அதிகமான அறிவு பெறவேண்டும் என்ற ஆசையே அடிப்படைத் தூண்டுதலாக இருந்தது என்று அவர் எழுதுகிறார். ஆனால், கல்கத்தா போன்ற தலைநகரத்தில் தட்டுக்கெட்டு, விரக்தி அடைந்து, ராகுல் மறுபடியும் தனது கிராமத்துக்கே வந்தார். 1909-ல் அவர், பதினாறுவது வயதில், திரும்பவும் கல்கத்தா போனார். ஒரு புகையிலைக் கடையில் உதவியாளாகப் பணி புரிந்தார். இங்கு மயக்கம் தரும் இனிப்புப் பண்டம் எதையோ தின்று அவர் மயங்கி விழுந்தார். அதனால் அவரை மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டியதாயிற்று. சுற்றித் திரியும் அவா, வசதியாளனாக ஒரு இடத்தில் இருந்து முறையாகப் படித்து பணம் சம்பாதிக்கும் உலகியல் போக்கைத் துறக்கும் ஆசை, நாடோடி மாதிரி சஞ்சரிக்கும் ஒருவிதமான வாழ்க்கை முறை ஆகியவை இளம் ராகுலை 1910ல் வசீகரித்தன. அவர் உணர்வு மயமானவராய், அகநோக்கு உடையவராய் இருந்தார். வேதாந்தத்தைச் சம்ஸ்கிருத மூலத்தில் கற்றறிய விரும்பினார். இம்முறை சாதுக்களுடன் சேர்வதற்காக அவர் வீட்டை விட்டு வெளியேறிய போது, வேலை செய்து சம்பாதிக்கவேண்டும், அமைதியாக வாழ்ந்து சுகபோகங்களை அனுபவிக்கவேண்டும் என்ற ஆசை அவருக்கு இருந்ததில்லை. வாழ்க்கைத் துறவும் உலக மறுப்பும் அல்லது பற்றற்று இருக்கும் பான்மை இதற்குள் அவர் மனசிலும் ஆன்மாவிலும் இடம்பெற்றுவிட்டது. ஆகவே, அவரது உடைமைகள் குறைவாக இருந்தன; அவருடைய ஆசைகள் அதிகம் 'ஆன்மீகமாக' இருந்தன. சாதுக்களின் சகவாசம் அவரை சநாதனம் மற்றும் குருட்டுத்தனமான நம்பிக்கையின் கடும் விமர்சகராக மாற்றியது. முடிவில் அவர் ஒரு நாத்திகராகவும், தீர்க்கமான உலகாயதவாதியாகவும் ஆனார்—ஆனால் இத் தத்துவ யாத்திரை மிக நெடியதாகவும் சிக்கலானதாகவும் இருந்தது.

அவருக்கு சமையல் வேலை தெரியாது. ஆரம்பத்தில் பிச்சை ஏற்று வாழ்ந்தார். நடந்தே அயோத்திக்கும் மொரதாபாத்துக்கும் போனார். டிக்கட் இல்லாமல் ரயிலில் ஹரித்துவாரம் சென்றார். இமயமலை அவரை வெகுவாக ஈர்த்தது. ஹரித்துவாரம் சேர்ந்ததும், அவர் தன் பள்ளித் தோழன் யாகேஷுக்கு, வசன கவிதை வடிவில், குழூக் குறியில், ஒரு தபால் கார்டு எழுதினார். ரிஷிகேசம், தேவபிரயாகை சென்றார். அங்கிருந்து சிரமமான மலைப் பாதைகள் வழியாக பத்ரி—கேதார், ஜம்னோத்ரி, கங்கோத்ரி ஆகிய இடங்களுக்குப் பயணம் செய்தார். சுற்றித்திரிந்த சாதுக்களோடு சேர்ந்து அவரும் கஞ்சா (ஹஷீஸ்) புகைத்தார்; ஆயினும் அதற்கு அடிமையாகிவிடவில்லை. 1948 ஜனவரி 30-ம் நாள்,

மகாத்மா காந்தி கொலை செய்யப்பட்ட பிறகு, தனது வைஞ்ஞானிக் பௌதிக்வாத் (விஞ்ஞானபூர்வ உலகாயதவாதம்) என்ற நூலில் காந்தியை முதலாளித்துவ ஏஜன்டு என்று குறிப்பிட்டுக் கடுமையாக விமர்சித்துள்ள அதே ராகுல், அந்த நாளுக்கு பிறகு இனி சிகரெட்டைத் தொடுவதில்லை என விரதம் பூண்டார். அதைக் காப்பாற்றினார். அவர் மாமிச உணவை விரும்பினார். ஆனால் மது வகைகளை உட்கொள்ளவில்லை. மட்டற்ற மன உறுதி பெற்ற மனிதர் அவர்.

இளம் பிராயமான பதினேழாவது வயதில் முதல் முறையாக இமயமலைக்குப் போன சுருக்கமான யாத்திரை அவருள் ஆழ்ந்த மனப்பதிவை ஏற்படுத்தியிருந்தது. இமயமலைக்கும் அப்பால், தடை செய்யப்பட்டிருந்த பிரதேசங்களுக்குப் போகவேண்டும் என்ற ஆத்ம தாகம் அவருக்கு உண்டாகியது. அவர் காசிக்குத் திரும்பினார். அங்கே சக்ரபாணி பிரம்மச்சாரியின் ஆசிரமத்தில் வசித்தார். 1910 அக்டோபரில், சம்ஸ்கிருத லகுகௌமுதியை அவர் முறைப்படி கற்கத் தொடங்கினார். ஒரு தடவை சுனார், மிர்ஸாபுர், அலகாபாத் ஆகிய இடங்களுக்கு நடந்தே போனார். ஆனால், காசியில் அவர் அநேக சம்ஸ்கிருத நூல்கள், காவியங்கள், இலக்கணம், மருத்துவம், வான சாஸ்திரம் எல்லாம் படித்தார். சிரம சாத்தியமான சித்திகளையும் நாம ஜபங்களையும் செய்து சில தேவ தேவியரின் அருளைப் பெறுவதற்கும் அவர் முயன்றார்.

பகுத்தறிவு ரீதியான முதல் தேடல் அவருக்கு அவரது பத்தொன்பதாவது வயதில் தோன்றியது. பண்டிதர் ராமாவதார் சர்மாவின் பேச்சைக் கேட்டபோது அது ஏற்பட்டது. சர்மா பெரும் கல்விமான்; எனினும் அவர் வேதங்களை நம்பவில்லை; கடவுள் நம்பிக்கையும் அவருக்கில்லை. ராகுல் தயானந்தர் பள்ளியில் ஏழாம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். அங்கு ஆங்கிலமும் கணிதமும் கற்றார். ஆனால் முறையான கல்விப் பயிற்சி என்பது அவருக்கு விதிக்கப்பட்டிருக்கவில்லை. ராகுல் பராசா மடத்தில் முறையான சாதுவானார். அவர் பெயர் ராம் உதார் தாஸ் என மாற்றப்பட்டது. அந்த மடத்தின் வருங்கால வாரிசாகவும் தலைவராகவும் இருந்து அனுபவிக்கக்கூடிய வசதியான வாழ்வு அவருக்குப் பிடிக்கவில்லை. கோயில் தெய்வங்களை இயந்திர ரீதியில் பூசை செய்கிற சடங்கு சம்பிரதாயங்களை அனுஷ்டிக்கும் ஒழுங்குமுறைப்படியான காலவரையறைகளை அவர் வெறுத்தார். 'சரஸ்வதி' என்ற இந்தி மாசிகையையும், 'டான்' என்ற ஆங்கிலப் பத்திரிகையையும் படிக்கலானார். சம்ஸ்கிருதம், இந்தி மொழிப் புத்தகங்கள் சிலவற்றை வாங்கினார்.

அந்த மடத்தில் மேற்கொண்டு படிப்பதற்கான ஏற்பாடு எதுவும் இல்லாததனுல், ராகுல் திரும்பவும் கனெய்லா என்ற தனது கிராமத்துக்கு வந்து சில மாதங்கள் தங்கினுர். ஆனுல் கல்வி அறிவு பெற்று வளரவேண்டும் என்ற அவா அவரிடம் வலிய தாக இருந்தது. அதற்கு கிராமத்தில் எந்த வாய்ப்பும் இல்லை. எனவே, ராகுல், இருபதாவது வயதில், மீண்டும் பராசா ஆசிர மத்துக்கு வந்து சேர்ந்தார். பல்வேறு பேச்சு மொழிகள், கலாசார பூர்வகுடி இயல்களில் அவருக்கு மிகுந்த ஆர்வம் இருந் தது. போஜ்புரியில், காஷிகாவில் உள்ள மல்லியில், பனுரஸ் வட்டாரத்தில் பேசப்படும் இந்தி மொழியில் காணப்படுகிற வெவ்வேறு ரக ஒலிக் குறிப்புகள் அமைப்புகள் பற்றி அவர் எழுதி யிருக்கிறுர். அதேபோல் பல்வேறு இனங்களைச் சேர்ந்த பெண்கள் கொண்டாடுகிற சடங்குகள் பழக்க வழக்கங்கள் பற்றியும் அவர் விரிவாகக் கூறுகிறுர்.

அறிவுப் பசி உந்தவும், ராகுல் 1913 ஜுலையில் பராசாவி லிருந்து ஓடிப்போனுர். ரயில் மார்க்கமாக ஹாஜிபூர் சேர்ந்தார். டிக்கட் இல்லாமல் அசன்சால், ஆத்ரா, காரக்பூர் வழியாகப் பயணம் செய்து அவர் பூரியை அடைந்தார். இந்தப் புண்ணிய ஸ்தலத்தை தரிசித்த பிறகு ராகுல் சென்னை சென்றுர். சாது என்ற தன்மையில் அவர் சத்திரத்தில் தங்கினுர். திருமலைக்கு நடந்தே போனுர். அங்கு உத்தராதி மடத்தில் தங்கினுர். அவர் தமிழ் கற்க ஆரம்பித்தார். புன்னமலை, பச்சப்பெருமாள், திருமிஷி, திண்ணனூர் சென்றுர். சந்நியாசியாக தெற்கில் உள்ள திருத் தலங்கள் அனைத்திற்கும் அவர் போனுர். திருப்பதி, திருக்கழுக் குன்றம், காஞ்சிபுரம், ராமேஸ்வரம் எல்லாம் போனுர்.

ராமநாதபுரம், பெங்களூர், விஜயநகரம், பாகல்கோட்டை, பந்தர்பூர், பூனு, பம்பாய், நாசிக், திரியம்பகம், கபில்தாரா, ஓங்கார்—மாண் தாதா, உஜ்ஜயினி ஆகிய இடங்களுக்குப் பயணம் செய்ததுபற்றி அவர் தனது சுயசரிதையில் விவரமாக வர்ணித் திருக்கிறுர். உஜ்ஜயினியில் அவர் கும்ப மேளாவை கண்டார். அங்கே பெரிய சாதுக்களிடையே ஏற்பட்ட சண்டைகளினுல் அவர் மிகுந்த வெறுப்படைந்தார். தாக்கோருக்கும் அகமதாபாத்துக்கும் போய்விட்டு அவர் 1914-ல் பராசா ஆசிரமத்துக்குத் திரும்பினுர். இந்த மடத்தின் சொத்து விவகாரங்களை கவனிப்பதிலும், மடத்தை நிர்வகிப்பதிலும் அவர் மனம் ஈடுபடவில்லை. இந்திய அரசின் தொல்பொருள் ஆய்வுப் பகுதியைச் சேர்ந்த எஸ். கங்கூலி, பிண்டிதாஸ் என்ற இரண்டு புகைப்படக் கலைஞர்கள் இந்த மடத்துக்கு வந்தார்கள். ராகுல் புகைப்படக் கலையினுல் பெரிதும் ஈர்க்கப்பட்டார். பின்னர் அது அவருடைய பொழுதுபோக்கு

வேலை ஆயிற்று. மடத்தில் வாழ்வது அவரைத் திணறடித்தது. எனவே ராகுல் ரகசியமாக அங்கிருந்து வெளியேறி, அயோத்தி சேர்ந்தார். அங்கே ஆர்ய சமாஜத்தைச் சேர்ந்த பிரசாரகர் களுடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. பிரசங்கம் புரிவதற் கும் விவாதங்கள் நடத்துவதற்குமான ஒரு சங்கத்தை அவர் ஆரம் பித்தார். ஒரு பிரமச்சாரியை எதிர்த்துக் கூட்டம் நடத்தினார். அந்த பிரமச்சாரி, அயோத்திக்கும் பைஸாபாத்துக்கும் நடுவில் இருந்த காளிதேவி கோயிலில் ஆடுகளைப் பலியிடுவது வழக்கம். ராகுல் அவரை எதிர்த்ததால், சநாதனப் பூசாரிகளால் தாக்கப் பட்டார். இவ்விஷயம் போலீசில் முறையிடப்பட்டது. ஆனால், இதற்குள் ராகுல் ஒரு ஆர்ய சமாஜி, சிலைகளைத் தகர்ப்பவர், நாத்திகர் என்று பெயர்பெற்றார்.

1915 முதல் 1922 முடிய உள்ள காலகட்டத்தை புதிய ஒளிப் பருவம் என்று ராகுல் குறிப்பிடுகிறார். அவர் பாட்டனார் இறந்து போனார். ராகுல் நல்லபடியாய் வீட்டோடு தங்கியிருந்து நிலையான ஒரு வாழ்க்கையை வாழக்கூடும் என்று அவர் தந்தை இன்னும் நம்பிக்கொண்டிருந்தார். ஆனால் ராகுல் ஒரு புரட்சிக்காரர். அவர் வேண்டுமென்றே ரஜபுத்திரர் மற்றும் முஸ்லீம்கள் வீடுகளில் மீன்களை சமைத்து உண்டார். ஆர்ய சமாஜ நூல்கள் பல படித் தார். 1915 ஜனவரியில் அவர் ஆக்ரா போனார். ஆர்ய முஸாபிர் வித்யாலயாவில் சேர்ந்தார். இரண்டு வருட காலம், சம்ஸ்கிருதம், அரபு மொழி, பல்வேறு மத இயல் நூல்கள், தேசிய வரலாறு ஆகியவற்றைக் கற்றார். இந்தக் கட்டுதிட்டமான வாழ்க்கை அவரிடம் எளிய வாழ்வுமீது ஒரு ஆசையையும், ஒருவிதமான தெளிவற்ற அரசியல் உணர்வையும் ஏற்படுத்தியது. பல்வேறு செய்திப் பத்திரிகைகளையும் படித்ததனால் இவ்வுணர்வு தூண்டி விடப்பட்டது. 1915-ல் கேதார்நாத் வித்யார்த்தி என்ற பெயரில், ஆக்ராவிலிருந்து வெளிவந்த 'முஸாபிர்' பத்திரிகைக்கு, உர்துவில் கட்டுரைகள் எழுதலானார். மீரத் நகரிலிருந்து பிரசுரமான 'பாஸ்கர்' எனும் இந்தி சஞ்சிகையில், ராகுல் தனது முதலாவது நீண்ட இந்திக் கட்டுரையை வெளியிட்டார். குடும்பஸ்தர்களை ஏய்த்துப் பிழைக்கும் போலி சந்நியாசிகளை அதில் அவர் அம்பலப் படுத்தியிருந்தார்.

அவர் பரவலாகப் படிக்கத் தொடங்கினார். சநாதன இந்து மதத்தை எதிர்த்து ஆர்ய சமாஜிகள் எழுதிய நூல்கள், இஸ்லாம் மதத்தை விமர்சித்து கிறித்துவ இயக்கத்தினர் எழுதியவை, தர்க்கரீதியில் அமைந்த சொற்சாதுரிய உரைநடைப் புத்தகங்கள், மௌல்வி சனாஉல்லாவின் அஹ்லே ஹாதிஸ் மற்றும் அநேக காதி யானி சஞ்சிகைகள் அவருடைய படிப்புக்கு உரிய முதன்மையான

விஷயங்களாயின. வைஷ்ணவத்திலிருந்து வைராகி உதாசி மதப் பிரிவைச் சேர்ந்தது, பிறகு ஆசிரம வாழ்விலிருந்து ஆர்ய சமாஜத்தைத் தழுவியது, சாதிப் பாகுபாடுகளைக் கண்டித்தது எல்லாம் பகுத்தறிவு வாதத்தை நோக்கிச் சென்ற முற்போக்கான மன யாத்திரையே ஆகும். 1915-ல் ஜபல்பூரில் மௌல்விகளுக்கும் ஆர்ய சமாஜப் பண்டிதர்களுக்குமிடையில் நடைபெற்ற பகிரங்க மத இயல் விவாதம்பற்றி அவர் எழுதினார். எவ்வாறு அவர்கள் நூல்களிலிருந்து ஆதாரங்கள் எடுத்துச் சொன்னார்கள், விவாதம் எப்படி இரண்டு நாட்கள் நடைபெற்றது என்பதை விரிவாக எழுதியிருந்தார். பின்னர் குரானை தேவநாகரி எழுத்தில் எழுதும் பணியும், அதை இந்தியில் மொழிபெயர்க்கும் வேலையும் அவருக்குத் தரப்பட்டன. ஆனால் சன்மானம் மிகவும் கம்மியாக இருந்தது. ஆகவே அவர் அதை விட்டுவிட்டார். அவர் ஆக்ராவில் மாணவராக இருந்தபோது, கோமகட்டமாரு சம்பவம் நிகழ்ந்தது. அதில் வீர சீக்கியர்கள், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடி, உயிர் நீத்திருந்தார்கள். இந்நிகழ்ச்சிகள் அனைத்தும் இளம் புரட்சிக்காரரின் உள்ளத்தில் கிளர்ச்சி உண்டாக்கியவாறு இருந்தன.

1916-ல் ராகுல் தனது சம்ஸ்கிருதப் பயிற்சியைத் தொடர்வது எனத் தீர்மானித்தார். எனவே லாகூர் சென்றார். பஞ்சாபி மொழியோடும் பெண்களோடும் அவருக்கு ஏற்பட்ட முதல் தொடர்பு வெகு சுவாரஸ்யமானது. கோடா என்ற ஊரில் ஒரு பஞ்சாபி அழகியை அவர் சந்திக்க நேர்ந்தது. அப்போது கதா—சப்தஷதி என்ற காவியத்தின் நினைவு அவருக்கு இயல்பாக எழுந்தது. டில்லி மற்றும் ஹரியானா வழியே அவர் பிரயாணம் செய்தார். அந்த சந்தர்ப்பத்தில் லாகூர் ஆர்ய சமாஜ இயக்கத்தின் கோட்டையாக விளங்கியது. சுதந்திர சிந்தனைப் போக்கு அவரைக் கவர்ந்தது. எனவே அவர் ஆசிரம வாழ்வை நேசிக்கும் சாதுக்களை விட்டுப் பிரிந்தார். ஆர்ய சமாஜம்கூட கோட்பாட்டில் முரட்டுப் பிடிவாதம் கொண்டதாகவும், பல தன்மைகளில் ஒரு குருட்டுச் சந்து ஆகவும் அவருக்குத் தோன்றியது, எட்டாவா, கான்பூர், லக்னௌ ஆகிய இடங்களில் இருந்த ஆர்ய சமாஜ அலுவலகங்கள் பலவற்றுக்கும் ராகுல் போனார். ஆனால் இந்த 'ஆர்ய முஸாபிர்' எந்த இடத்திலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ராய் பரேலியில் அவர் இந்தி மொழி மற்றும் இலக்கியம்பற்றி ஒரு சொற்பொழிவாற்றினார். தயார் செய்யாமலே பேசிய பேச்சு அது. பிறகு காசியில் பல பிரசங்கம் புரிந்தார். அகாரோராவில் அவர் தந்தை மீண்டும் அவரை அணுகினார்; கிராமத்துக்கு வந்து வீட்டோடிருந்து நிலங்களை கவனித்துக்கொள்ளும்படி வேண்டினார். ஆனால் ராகுல், தான் ஒருமுறை துறந்து வந்த வாழ்க்கைக்குத் திரும்புவதற்கு

இணங்கவில்லை. அந்நாட்களில் ராகுல் சம்ஸ்கிருதத்தில்தான் கடிதங்கள் எழுதிவந்தார். 1922-ம் வருஷத்தில், பிப்ரவரி 13 முதல் ஆகஸ்ட் 9 முடிய உள்ள அவரது டயரிக் குறிப்புகள்கூட சம்ஸ்கிருதத்தில்தான் எழுதப்பட்டிருக்கின்றன. அப்போது அவர் ஒரு அரசியல் கைதியாக பக்ஸார் சிறையில் இருந்தார். சிற்சில இடங்களில் சம்ஸ்கிருதம், அரபு, உருது, இந்தி மொழிகளில் கவிதை வடிவத்தில் எழுதவும் முயன்றிருக்கிருர். அகாரோராவி லிருந்து ஓடிப்போக அவர் திரும்பவும் முயன்ருர். மனம்முறிந்த அவர் தந்தை பனுரஸ் வரை அவரைத் தொடர்ந்தார்; ராகுலின் மனசை மாற்றப் பெரிதும் முயன்ருர். ஆனுல் தோல்வி கண்டார். இதுதான் அவருக்கு தந்தையுடன் ஏற்பட்ட கடைசிச் சந்திப்பு ஆகும். பின்வந்த பல வருடங்களுக்கு ராகுல் தனக்கென்று ஒரு வீடு பெற்றிருந்ததே இல்லை. ஐம்பது ஆண்டு பூர்த்தியாகிறவரை தனது சொந்த மாவட்டமான அஜாம்காருக்குத் திரும்பக்கூடாது என்று ராகுல் உறுதி பூண்டார். அதை அவர் காப்பாற்றினுர்.

1918-ல் ரஷ்யப் புரட்சிபற்றி, உருது, இந்தி, இங்கிலீஷ் செய்திப் பத்திரிகைகளில் ராகுல் சில செய்திகளை வாசித்தார். ‘புதிய அட்லாண்டிஸ்’ அதாவது கற்பனுலோகம் ஒன்றை, இலட்சிய கம்யூனிச சமுதாயத்தைப்பற்றி அவர் சிந்திக்கலானுர். அதுபற்றி 1922-ல் சம்ஸ்கிருத செய்யுள் வடிவத்தில் ஒரு குறிப்புகூட எழுதினுர். 1923,24-ல், ஹஜாரிபாக் சிறையில் இருந்தபோது, பைஸாவின் ஸாதி (இருபத்திரண்டாம் நூற்ருண்டு) என்ற புத்த கத்தை அவர் எழுதினுர். அது அவருடைய அரசியல் இலட்சியக் கனவை, புத்தக வடிவத்தில் பூர்த்தி செய்தது. 1919 ஏப்ரல்–மே யில் லாகூரில் நடைபெற்ற ஊரடங்குச் சட்ட ஆட்சியை ராகுல் கண்டு அனுபவிக்க நேர்ந்தபோதுதான் அரசியலோடு அவருக்கு முதல் முறையாக உண்மையான சந்திப்பு நிகழ்ந்தது. இங்கே ஒரு புதிய அறைகூவல் எதிர்ப்பட்டது. ஆசிரம முறையின் சம்ஸ்கிருத தெய்வீக இயல் முஸ்தீப்போ, ஆர்யசமாஜி முறையின் எத்தனமோ எந்தவிதத்திலும் பயன்பட முடியாத தளம் அது. ‘ஓ’ டயர். ஷாஹி’யின் இருண்ட நாட்கள் பிரிட்டிஷ் ஆட்சியின்மீது ஒரு புதிய வெறுப்பு அலையைக் கிளப்பிவிட்டன. ‘அநேக இந்தியர்களின் முகமூடி கிழிக்கப்படுகிறது’ என்று ராகுல் எழுதுகிருர். சம்ஸ்கிருத சாஸ்திரி பரீட்சையில் ராகுல் தோல்வி அடைந்தார். அவருடைய தீவிரக் கருத்துக்களே காரணமாகும். பின்னர் ராகுல் சித்திர கூடம் சென்ருர். அங்கு காசி நியாயமத்யமா பரீட்சை சம்ஸ் கிருதத்தில் எழுதினுர். அதிலும் தோல்வியே அடைந்தார். ஆனுல், கல்கத்தா மீமாம்ஸா பரீட்சையை ஜபல்பூரில் எழுதியதில் முதலா வது வகுப்பில் தேர்ச்சி பெற்ருர்.

பயண ஆர்வம் மறுபடியும் ராகுலை தொந்தரவு படுத்தியது. 1920-ல்,27-ம் வயதில்,ராகுல் கார்வியிலிருந்து ரயில் மூலம் டிக்கட் இன்றிப் பிரயாணம் செய்தார். பனாரஸில் நோய்வாய்ப்பட்டார். முதல் தடவையாக சாரநாத் போனார். கோரக்பூரிலிருந்து, புத்தர் பரிநிர்வாணம் அடைந்த இடமான காசியா சேர்ந்தார். இப் புத்த ஸ்தலங்களுக்குப் போனது பற்றி அவர் தனது சுயசரிதையில் பரவசமான கவிதை நடையில் எழுதியிருக்கிறார். கோரக்பூரிலிருந்து அவர் நேபாளம் சென்றார். லும்பினிக்கும் கபிலவாஸ்துவுக்கும் போனார். நிகாலிஹாரா ஏரிக்கரைமீது சிதைந்த நிலையில் காணப்பட்ட அசோகர் கல்வெட்டு அவரைக் கவர்ந்தது. அவர் போதியாக்களின் பிரதேசத்துக்குச் செல்லவேண்டும் என்று ஆசைப்பட்டார். நேபாள மகந்து (உயர் புரோகிதர்) ஒருவர் அவரைத் தம் சீடராக ஏற்றுக்கொள்ள முன்வந்தார். ராகுல் அதை மறுத்துவிட்டார். இந்தப் புரோகிதர்களுக்கும் கஞ்சா பிடித்து ஒழுக்கமற்றுத் திரியும் யோகினிகளுக்கும் உள்ள தொடர்புகள் பற்றி அவர் நையாண்டி செய்து எழுதியுள்ளார்.

ராகுலின் வாழ்க்கை யாத்திரையின் சுவாரஸ்யமான, அபாயகரமும் துணிச்சலும் நிறைந்த பகுதியை, திபெத்துக்கு அவர் நான்கு தடவைகள் போனது, பற்றி சொல்வதற்கு முன், ராகுலின் அரசியல் வாழ்வை சுருக்கமாகக் கூறலாம். அதை அவர் 'அரசியலில் பிரவேசம் (1921–27)' என்று குறிப்பிடுகிறார். அவருடைய முதலாவது அரசியல் பேச்சு, 1921-ல் காண்ட்வா என்ற இடத்தில் ஒத்துழையாமை இயக்கத்தின்போது அவர் பேசியது ஆகும் என்று அவர் நினைவுகூர்கிறார். அவர் சந்நியாசியாக, காவி உடையோடு, சாலம்பூர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி அலுவலகத்தினுள் சென்று, பராசாவிலிருந்து தனது பணியைத் தொடங்க விரும்புவதாகத் தெரிவித்தார். ஒரு சம்பவத்தை அவர் நகைச்சுவையோடு பதிவு செய்திருக்கிறார். மூடபக்தி கொண்ட சீடர்கள், தெய்வீக மாந்தர் என்று பேர் பண்ணி வாழ்ந்தவர்களுக்கு, பலியிடப்பட்ட மிருகங்கள், கஞ்சா, மதுபானம் ஆகியவற்றை வழங்குவதை விட மறுத்தனர். அப்போது ஒருநாள் ராகுல், தன்மீது காந்தி என்றொரு புதிய சாமி வந்திருப்பதாக நடித்தார். ''இப்போது எல்லாக் கடவுள்களும் காந்தி பாபா கூடத்தான் இருக்கிறார்கள். கஞ்சா, மதுபானம், பலியிடும் மிருகங்கள் முதலியவற்றை யார் கொடுத்தாலும் சரி, அவர்கள் அழிந்துபோவார்கள். நான் அவர்களை சபிக்கிறேன்'' என்று கூச்சலிட்டார். அது நல்ல பலன் அளித்தது. சந்நியாசி ராகுல், சாப்ராவில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஏழை எளியவர்களுக்கு உதவிபுரிவதில் ஈடுபட்டார். அந்நாட்களில் சமூக சேவையும் தேசீய இயக்கமும் தனித் தனியான செயல் துறைகளாக இருந்ததில்லை. ஏக்மாவில்,

காந்தி பள்ளிக்கூடத்தை மையமாகக் கொண்டு, நூல் நூற்கும் ராட்டினங்களை அவர் வழங்கினர். போஜ்புரியில் அவர் மக்கள் மத்தியில் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அந்நிய ஆட்சியை எதிர்க்கும் பேச்சுகள் அவை. 1922 ஜனவரி 31-ம் நாள் அவர் கைது செய்யப்பட்டார். சிறைக்குள் பதுக்கிக் கொண்டுவரப் பெற்ற, டிராட்ஸ்கியின் போல்ஷ்விசமும் உலகப் புரட்சியும் என்ற நூலின் பிரதி ஒன்று அவர்களுக்குக் கிடைத்தது. ராகுல் சம்ஸ் கிருதத்தில் அரசியல் பஜனைப் பாடல் ஒன்றை இயற்றி, சிறையி லிருந்த சகாக்களுக்கு உற்சாகமூட்டும் வகையில் அதை உரக்கப் பாடினர்:—

ஷ்ருனு ஷ்ருனு ரே பந்த், அஹ மிகா நஹ்யேகாகி
(கேள் ஓ பயணியே, நான் தனியாக இல்லை!)

ராகுல் குற்றத்தை ஒப்புக்கொள்ளவும், அவருக்கு ஆறு மாதம் சாதாரண சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. 'நன்றி' என்றார் ராகுல். அவர் கரங்களில் இரும்பு விலங்கு மாட்டப்பட்டது. ''என் இரண்டு கைகளிலும் தாத்தா வெள்ளிக் காப்புகள் அணி வித்தார். அவையும் ஏறக்குறைய இவ்விலங்குகள்போல்தான் இருந்தன. இதில் ஒரே ஒரு வித்தியாசம், இவை இறுக்கமாகப் பிணைக்கப்பட்டிருப்பதால், நான் நன்றாக வேலை செய்ய இயல வில்லை'' என்று அவர் எழுதியுள்ளார். பக்ஸார் சிறையில் அவர் ஆறு மாதங்கள் வசித்தார். அப்போது அவர் 'ஃபைல்கள்' 'கறுப்பு' ஆகிய பொருள்கள் பற்றி, பிரஜ் பாஷாவில் இசைப் பாடல்கள் இயற்றினர். பாரதேந்து அரிச்சந்திரா எழுதிய அந்தேர் நகரி என்ற நாடகத்தை அவர்கள் நடித்தார்கள். சிறை யில் ராகுல், குரானை சம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்க ஆரம்பித் தார். உடன் இருந்தவர்களுக்கு உபநிஷதமும் வேதாந்தமும் கற்றுக்கொடுத்தார். சிறைக்குள் நடந்த செயல்கள் பற்றிய செய்திகள் மறைமுகமாக வெளியே எடுத்துச் செல்லப்பட்டன. அவை மஸ்ருல் ஹக்கின் 'தாய் நாடு' பத்திரிகையில் வெளியிடப் பட்டன.

1922 அக்டோபர் 29-ல் ராகுல் ஜில்லா காங்கிரஸ் செயலாள ராகத் தேர்வு செய்யப்பட்டார். கயாவில் நடைபெற்ற காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் ராஜாஜி துணை மகாத்மா என அழைக்கப் பட்டார். மாறுதல் எதுவும் வேண்டாதவர்களின் உறுதியான குழுவுக்கு அவர் தலைவராக இருந்தார். அவர்களுக்கு எதிரான கோஷ்டியில் மோதிலால் நேரு, வித்தல்பாய் பட்டேல், தேசபந்து சி. ஆர். தாஸ் போன்ற சுயராஜ்யக் கட்சித் தலைவர்கள் இருந் தார்கள். ராகுல் மெது மெதுவாக கம்யூனிசத்தின் புரட்சிக் கொள்கையின் பக்கம் போய்க்கொண்டிருந்தார். அவர் முற்றி

லும் மதப்பற்று இல்லாதவராக, நாத்திகராகவும் கூட, மாறினூர். போதிகயா ஆலயத்தை சநாதன இந்துக்களிடமிருந்து புத்த சமயத்தினருக்கு மாற்றித் தரவேண்டும் என்று ராகுல் கயா காங்கிரசில் தேசத் தலைவர்களிடம் கோரிக்கை விடுத்தார். 1923 மார்ச், ஏப்ரல் மாதங்களில் ராகுல் நேப்பாளத்தில் ஒன்றரை மாதங்களைக் கழித்தார். அந்நாட்களில் இந்து யாத்திரீகர்கள் சிவராத்திரி அன்று பசுபதி நாதரை தரிசிப்பதற்காக மட்டுமே நேப்பாளத்திற்குள் அனுமதிக்கப்பட்டார்கள். அங்கே புத்தமதப் பண்டிதர்கள், சந்நியாசிகள், மங்கோலியர் மற்றும்'சீனிய'லாமாக் களுடன் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது.

நேப்பாளத்திலிருந்து திரும்பியதும் ராகுல் மீண்டும் கைதானூர். பங்கிப்பூர் சிறையில் தனிக் கொட்டடிக்கு அவர் அனுப்பப் பட்டார். பின்னர் ஹஸாரிபாக் சிறைக்கு மாற்றப்பட்டார். அங்கே அவர் இரண்டு வருடங்கள் தங்க நேர்ந்தது. பாலி மொழி நூலான மஜ்ஹிம் நிகாயாவின் சிங்கள எழுத்துப் பிரதி ஒன்று அவ ரிடம் இருந்தது. தினந்தோறும் அதை அவர் படித்தார். போலீசார் கையில் சிக்கிய அந்தப் புத்தகத்தை மீட்பதற்கு அவர் இரண்டு நாட்கள் உண்ணுவிரதம் இருக்கவேண்டியதாயிற்று. காகிதம், பென்சில் அல்லது பேனு எதையும் வைத்துக்கொள்ள கைதிகள் அனுமதிக்கப்படவில்லை. ஆயினும் எப்படியோ ஒரு கற்பலகையை அவர் அடைந்தார். கணிதம், அல்ஜிப்ரா, ஜியாமட்ரி, ஒளி இயல், வானநூல் ஆகியவற்றில் அவர் பெற் றிருந்த அறிவை திருத்திக்கொள்ள அது உதவியது. அதே சிறை யில் வசித்த, கேரளாவைச் சேர்ந்த சங்கராச்சாரியார் ஒருவர் இதில் அவருக்குத் துணைபுரிந்தார். கருணையுள்ள ஆங்கிலோ இந்தியச் சிறை அதிகாரி குழந்தைகளுக்கான இங்கிலீஷ் புத்தகங் கள் சிலவற்றை அனுப்பினூர். ராகுல் அவற்றையும் படித்தார். நட்சத்திரங்கள் சம்பந்தமான பெரிய படங்களை அவர் வரைய லானூர். பெரும்பாலும் மர்மமும் வீரசாகசங்களும் நிறைந்த நான்கு ஆங்கில நாவல்களை இந்தியில் மொழிபெயர்த்தார். பிரஞ்சு, அவஸ்தான் மொழிகளை இக்காலகட்டத்தில் அவர் கற்றூர்.

1926-ல் மீரத் நகரில் ராகுல் ஹரி ராம்தாஸ் என்பவரைச் சந்தித்தார். பின்னர் இவர் பிரமச்சாரி விஸ்வநாத் ஆனூர்; இப் போது பிக்கு ஆனந்த கௌசல்யாயன் ஆகியிருக்கிறூர். ராகுலும் இவரும் மிக நெருங்கிய உயிர் நண்பர்கள் ஆயினர். ராகுல் காஷ்மீரில் பயணம் செய்தார். கார்கில் வழியாக லடாக் போனூர். ஸ்தாகசங்க—ராஸ்—பா என்ற லாமாவை ஹெமிஸ் என்ற இடத்தில் சந்தித்தார். கால்பியில் ராகுல் சிறிது மெஸ்மரி

சம் (வசிய வித்தை) கற்றிருந்தார். அதை இந்த லாமாக்கள்மீது பிரயோகித்து அவர்களைத் தன்வயப்படுத்தினர். 18,000 அடி உயரம் மலைமீது ஏறி கார்டோங் வா எனும் இடம் சேர்ந்தார். அறுபது வயது ரிஸோங் லாமாவை சந்தித்தார். நுப்ராவிலிருந்து லே சென்றார். மன்–பங்–காங் ஏரி, சுமூர்த்தி கினர் வழியாக அவர் சிம்லா திரும்பினர். நாடோடிகள் மட்டுமே பிரயாணம் செய்யும் பாதைகள் வழியே ராகுல் செய்த பயங்கர யாத்திரைகள் 1926-ல் திபெத்திய எல்லையில் தொடங்கின. அவர் வழியில் கண்டு உடன் இட்டுச் சென்ற செங்–துக் என்ற சின்ன திபெத்திய நாய் ஒன்றின் மரணம் பற்றி அவர் உள்ளத்தைத் தொடும் வகையில் விவரிக்கிறார்: ''என் அருமைப் பெற்றோரின், மற்றும் அன்புக்குரிய பாட்டன்மார்களின் மரணத்தின்போது கூட நீர் சுரக்காத என் கண்கள் இந்தச் செல்ல நாயின் சாவினல் கட்டுப்படுத்தமுடியாத அளவுக்கு கண்ணீர் சிந்தின. இந்த நாய்க்கு ஒரு இரங்கற்பாவாக நான் சம்ஸ்கிருதத்தில் எட்டு சுலோகங்கள் எழுதினேன். ஒவ்வொரு பாடலும் 'செங்–துக்கே! த்வத் பிரயாணே!' என்று முடியும்'' என அவர் குறிப்பிட்டுள்ளார்.

மேற்கத்திய திபெத்தை இப்படி முதல் தடவையாகப் பார்த்த பிறகு ராகுல் புஷாகார் மாநிலம் சேர்ந்தார். ஸம் நாம், கனும், சீனி, ஸ்பிதி ஆகிய இடங்களுக்குப் போனர். கோட்துவாராவில் மிஸ்டர் ஸ்டோக்ஸ் எனும் ஆப்பிள் பழத் தோட்டக்காரரை சந்தித்தார். சிம்லாவுக்கு வந்தார். பீகார் திரும்பியதும், ராகுல் மீண்டும் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டார். குடியானவர்கள் நிறைந்த பெரிய கூட்டங்களில், ராஜேந்திரப் பிரசாத் கூடச் சேர்ந்து, அவர் சாப்ரா பேச்சு மொழியில் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். 1926-ல் கௌஹாத்தி காங்கிரஸ் மாநாட்டில் கலந்துகொண்டார். மஸ்ருல் ஹக்கை ஃபரித்பூரில் சந்தித்தார். ஆன்மீக விஷயமான புத்தகங்கள் கொண்ட அவருடைய பெரிய நூலகத்தைப் பார்வையிட்டார். 1927 மார்ச் 30-ல் அவர் பராசாவை கடைசித் தடவையாகக் கண்டார். ஜமீந்தாரி (நிலப் பிரபுத்துவ) முறை ஒழிக்கப்படுகிறவரை அந்த ஊருக்குத் திரும்புவதில்லை என்று உறுதிபூண்டார்.

கல்கத்தாவில் மகா போதி சங்கம் அவருக்கு உதவியது. வித்யாலங்கார் பரிவேணவில் சேர்வதற்காக அவர் ஸ்ரீலங்கா சென்றார். பத்தொன்பது மாதங்கள் (16 மே 1927 முதல் 1 டிசம்பர் 1928 முடிய) அவர் புத்தமத நூல்களைக் கற்றார். இந்திய கலாசார வரலாறுபற்றிய தனது ஞானத்தையும் விரிவுபடுத்திக் கொண்டார். ஹஸாரிபாக் சிறையில் இருந்தபோது அவர் பிராஹ்மி எழுத்துக்களைக் கற்றிருந்தார்; எபிகிராபிகா இண்டிகா

வின் பழைய பிரதிகளைப் படித்தார். இலங்கையில், பாலி நூல் கழக வெளியீடுகளும், ராயல் ஏஷியாடிக் சொசைட்டி அதன் லண்டன், பம்பாய், வங்காளம், இலங்கை கிளைகளிலிருந்து பிரசுரம் செய்த சஞ்சிகைகளின் பழைய தொகுதிகளும் தான் அவரது ஆர்வத்தைப் பெரிதும் ஈர்த்தன. ஆரம்பத்தில் அவர் தனது பிராமண தர்மக் கடவுள் நம்பிக்கையோடு புத்தமதக் கொள்கையை இணக்கமுறச் செய்ய முயன்றார். ஆனால் அத்தகைய சக வாழ்வு நெடுங்காலம் நீடித்திருக்க முடியவில்லை. சர் டி.வி. ஜெயதிலகே அவருக்குத் தேவைப்பட்ட புத்தகங்கள் அனைத்தையும் வாங்கி உதவினார். 1927 டிசம்பரில், இந்திய தேசீய காங்கிரஸ் மாநாடு சென்னையில் நடைபெற்ற பின்னர், ராஜேந்திர பிரசாத் இலங்கை சென்றார். அங்கே ராகுல் அவருக்கு வழிகாட்டியாக உதவிபுரிந்தார். ராகுல் எழுத்தாளர் வாழ்க்கையைத் துவக்கியது இந்தக் கட்டத்தில்தான். அலாகாபாத்திலிருந்து வெளிவந்த சரஸ்வதி என்ற இந்தி மாதப் பத்திரிகையில் இலங்கைபற்றிய கட்டுரைகளை அவர் எழுதினார். ஸ்தல மாணவர்கள் சிலருக்கு சம்ஸ்கிருதம் கற்றுத் தந்தார். சிங்களமும் பிரஞ்சும் படித்தார். திபெத்துக்குப் போகவேண்டும் என்ற வலிய எண்ணத்தோடு அவர் இந்தியா திரும்பினார்.

ராகுல், 1929, 1934, 1936, 1938ஆம் வருடங்களில், நான்கு முறை திபெத் சென்றார். பக்தியார் கில்ஜி தனது படைகளோடு நளாந்தா, விக்ரமஷீலா பல்கலைக் கழகங்களைத் தாக்கியபோது புத்த பிக்குகள் கையெழுத்துப் பிரதிகளையும் ஓலைச்சுவடிகளையும் எடுத்துக்கொண்டு நேப்பாளம், அஸ்ஸாம், திபெத் ஆகிய இடங்களுக்குத் தப்பி ஓடினார்கள். அநேக நூல் நிலையங்களும் மடங்களும் அழிக்கப்பட்டு தீயிடப் பெற்றபோது, இந்திய சிலாரூபங்கள் சிற்பங்களிலும் சுதை ஓவியங்களிலும் பாதுகாக்கப்பட்டவிதத்தில், பனை ஓலைச் சித்திரங்களாகவும், புனித நூல்களின் மர அட்டைகளில் தீட்டிய படங்களாகவும் திபெத்துக்கு எடுத்துச் செல்லப் பட்டன. இந்தக் கலை புதிய முறையில் பட்டுப் பதாகைகளில் பதிவு செய்யப்பட்டுமிருந்தன. பௌத்தக் கலை இதில் புதியதோர் போக்கை அடைந்திருந்தது. இந்தியக் கோட்டுச் சித்திரங்களும் சீன இயற்கைக் காட்சிகளும் வஜ்ரயானி தேவாலயப் படங்களோடும் ஸ்தல மக்கள் கலையோடும் கலந்துபோயின. ஓலைச் சுவடிகள் இந்தியாவிலிருந்து திபெத்துக்கு ஏழாம் நூற்றாண்டில் சென்றன. இதுபற்றிய குறிப்பு திபெத்திய சக்கிரவர்த்தி ஷ்ராங் வத்சன்—ஸாம்—போ (கி.பி. 630–693)வின் ராஜசபையில் காணப் படுகிறது. இந்த நடவடிக்கை ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதின்மூன்றாம் நூற்றாண்டு வரை நிகழ்ந்தது. அப்போது ஆயிரக் கணக்கான சம்ஸ்கிருத மற்றும் பாலி நூல்கள் போத் மொழியில்

பெயர்த்தெழுதப்பட்டன. இப்புத்தகங்களின் ஞானம் புத்தமதம், அதன் தத்துவங்களின்மீது புதிய ஒளி பாய்ச்சுவதுடன் பிராமணீய மற்றும் ஜைன மரபுகளையும் தெளிவுபடுத்துகிறது. ஏனெனில் இங்கே மறைந்துபோன அநேக நூல்கள் திபெத்திய லாமாக்களின் மடங்களில் பாதுகாக்கப்பட்டு வந்தன. கஞ்சூர், தஞ்சூர் மடங்களில் மட்டும் இத்தகைய 10,000 இந்திய நூல்கள் பத்திரப் படுத்தப்பட்டிருந்தன. ராகுல் நான்கு தடவைகள் திபெத்போய் வந்ததன்மூலம் இந்த மதிப்பு மிகுந்த விஷயங்களை அதிக அளவில் இந்தியாவுக்குத் திரும்பக் கொண்டுவர முடிந்தது. திபெத் மொழியின் ஆரம்பப் பாடநூல் மற்றும் இலக்கணத்தை சம்ஸ்கிருதத்தில் எழுதுவது, தர்மகீர்த்தி, சுபந்து, அசங்கா போன்ற பௌத்த தர்க்க ஞானிகளின் நூல்களைப் புதுப்பிப்பது, பாதுகாப்பது ஆகிய பணிகளில் ராகுல் முன்னோடி வேலைகள் செய்தார். பின்னர், பௌத்த தர்க்கம் என்ற நூலின் கீர்த்தி வாய்ந்த ரஷ்ய ஆசிரியரான பேராசிரியர் ஷெர்பாட்ஸ்கி, லெனின்கிராட் பல்கலைக் கழக நினைவுகள் என்ற அவரது புத்தகத்தில், இப் பொருள்பற்றி மெய்ம்மையாகக் கற்றுக்கொடுக்கக் கூடியவர் தனக்குப் பிறகு இந்த உலகத்தில் ஓரே ஒரு நபர்தான் உண்டு என்றும், அவர் ராகுல் சாங்கிருத்யாயன் தான் என்றும் எழுதினார். ராகுல் பௌத்த இயல் பண்டிதர் என்ற முறையில் சோவியத் ரஷ்யாவுக்கு அழைக்கப்பட்டார். லெனின்கிராட் பல்கலைக் கழகத்தில் அவர் கற்பித்தார். பிறகு தனது வாழ்வின் அந்திம காலத்தில் ஸ்ரீலங்கா வித்யாலங்காரா பல்கலைக் கழகத்தில் போதித்தார். ஆனால் இந்தியப் பல்கலைக் கழகம் எதிலும் அவர் தன் வாழ்நாளில் ஒரு முறைகூட அனுமதிக்கப்படவில்லை; கற்றுத்தர அழைக்கப்பட்டது மில்லை. முறையான 'பட்டப் படிப்பை' அவர் பெற்றிருக்கவில்லை என்பதுதான் காரணமாகும்! தோல் தடித்த நமது கல்லூரி நிர்வாக அதிகாரிகளின் பரிதாபத்துக்குரிய தன்மைதான் என்னே!

1928-ல் திபெத்துக்குப் போவது சுலபமான காரியம் அல்ல. நேப்பாளம் வழியாக ரகசியமாய் போகவேண்டும். அவர், சிவராத்திரி யாத்திரையைப் பயன்படுத்திக்கொண்டு, ரக்சால், அம்லேக்கஞ்ச் வழியே நேப்பாளம் போனார். திறந்த லாரி ஒன்றில் அவர் காத்மண்டு சென்றார். காத்மண்டுவில் மகா பௌத்த ஸ்தூபியில் துக்பா—லாமாவை சந்தித்தார். லடாக்கின் ஹெமிஸ் லாமாவிடமிருந்து நல்ல சிபாரிசுக் கடிதம் ஒன்றை ராகுல் பெற்றிருந்தார். இங்கே அவர் ஒரு நேப்பாளியாக மாறினார். துக்—பா லாமாவின் சீடர் குழுவில் சேரமுயன்றார். ஆனால், அவர் லாமாவை சந்திக்க நிர்ணயித்திருந்த இடமான எல்மானுக்கு லாமா போகவேயில்லை; நேரே நேமாம் போய்விட்டார். ராகுல் தேசசஞ்சாரிகளான திபெத்திய வியாபாரிகளின் கோஷ்டியில் சேர்ந்துகொண்

டார். அவர்கள் யாக் எனும் காட்டெருமைகள்மீது உப்புமூட்டை களை நேப்பாளத்துக்கு எடுத்துச் சென்று, அங்கே அரிசி அல்லது சோளத்துக்கு பண்டமாற்று செய்தார்கள். ராகுல் தூக்—பா லாமாவை சந்தித்து, அவர் குழுவில் ஒரு உறுப்பினரானார். அவர் களோடு சேர்ந்து பாத்கோசி, தாடபாணி வழியே பிரயாணம் செய்தார். நேப்பாள எல்லைப் பாதுகாவலர் அவரை விசாரணை செய்தார்கள். ராகுல் தன் பெயரை செவாங் என்றும், குன்னூரில் (கின்னூர்) பிறந்தவர் என்றும், ராங் என்ற தெய்வ அவதாரமான லாமாவின் சீடர் என்றும் அறிவித்தார். தூக்—பா லாமா நேமாமிலேயே பணிகளில் ஈடுபட்டு, தனது சீடர்களின் காணிக் கைகளைப் பெறுவதில் கருத்தாக இருந்தார். ராகுலுக்கோ திபெத் போயாகவேண்டும் என்ற தவிப்பு. அதற்கான 'லாம்—சிக்' (எல்லை தாண்டிச் செல்வதற்கான அனுமதி) பெறுவது அவருக்கு பெரிய தலைவலியாக இருந்தது. அவர் புத்தகயாவில் மங்கோலிய பிக்கு ஒருவரை சந்தித்திருந்தார். அதிர்ஷ்டவசமாக அவரை ராகுல் இங்கு காணநேர்ந்தது. அவர் சுலபமாக இரண்டு அனுமதிச் சீட்டுகள் வாங்கிவிட்டார். இந்த மங்கோலிய சந்நியாசியின் பெயர் லோப்ஜத்—ஷெராவ். (அந்தப் பெயரை சம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்தால் சுமதிப்பிரஞ்ஞு என்று ஆகும்.) ராகுல் அவருடைய கனத்த சாமான்மூட்டையை தோள்களில் சுமந்தவாறு அவருடன் சேர்ந்து பயணம் செய்தார். வழியில் அவர்கள் சில கூலிக்காரர்களை நியமித்துக்கொண்டார்கள். ஆனாலும் அந்த வழி பத்திரமானது அல்ல. வழிப்பறிக் கள்வர்கள் நிறைந்த பகுதி அது. கொள்ளைக்காரன்போல் தோன்றிய எந்த அந்நியனைக் கண்டா லும், ராகுல் தன் தலையிலிருந்து தொப்பியை எடுத்துவிட்டு, நாக்கை நீட்டி, 'குச்சி குச்சி' (இரக்கம் காட்டுங்கள்) என்று கெஞ்சி, இரண்டு கைகளையும் நீட்டி பிச்சை கேட்டார். பல வியாபாரிகள் லாமாக்கள் போலவும், சந்நியாசிகள் போலவும் நடித்து, மதிப்பு மிகுந்த பொருள்களை எடுத்துச்சென்றார்கள். பொதுவாக அங்கே கொள்ளைக்காரர்கள் முதலில் பயணிகளைக் கொன்றுவிடுவார்கள்; அப்புறம்தான் அவர்களது உடைமைகளைச் சோதனையிடுவார்கள். அதிர்ஷ்டவசமாக, அவர் பனிக்கட்டி போல் குளிர்ந்த கோசி நதியின் நீரைக் கடந்து ஷேகர் என்ற இடம் சேர்ந்தார். அங்கே லார்ச்சே வரை மூட்டைகளைச் சுமந்து செல்வதற்குச் சில கழுதைகள் அவருக்குக் கிடைத்தன. பிரம்மபுத்திரா நதிக்கரைமீது மெதுவாகப் பயணம் செய்து, ஒரு மட்டக் குதிரையில் சவாரி செய்து நார்தாங் அடைந்தார் அங்குள்ள மடத்தில், பதினொன்றும் நூற்றாண்டைச் சேர்ந்த 338 நூல்கள் இருந்தன. அனைத்தும் திபெத் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டிருந்த இந்திய நூல்களாகும். பிறகு அவர் டாஷி

ஸம்போ கம்பா போனுர். சினுவுக்கு ஓடிப்போன டாஷி லாமாவை சந்தித்தார். தலாய்லாமாவுக்கு அடுத்தப்படியாக மிகச் சக்தி வாய்ந்த மதத் தலைவர் அவர். ஷிகார்ச்சேயிலிருந்து, ராகுல் மட்டக் குதிரைமீது, டிக்கி—தோமோ, ஐரலா கணவாய், நகாச்சே, தண்டே—காம்—வாலா வழியாக லாஷா போய் சேர்ந் தார். சூ—ஓரி எனும் இடத்தில் ஒரு படகின்மூலம் பிரம்மபுத்திரா நதியைக் கடந்தார். 1929 ஜூலை 19-ம் நாள், சிறிது தொலைவி லிருந்து, போடாலா மடத்தின் தங்கக் கூரையை அவர் கண்டார். மூன்று மணி நேரம் நடந்தபின் அவர் தர்ம சாகுவின் அரண் மனையை அடைந்தார். அங்கே அவருக்கு நல்ல வரவேற்பு கிட்டியது. ராகுல் தர்ம சாகுவை நேப்பாளத்தில் சந்தித்திருந் தார். அவருடைய இரு புதல்வர்களான பூர்ணமன், கியான்மன் சாகுவுக்குக் கடிதங்கள் வாங்கி வந்திருந்தார்.

கடைசியாக ராகுல், திபெத்தின் தலைநகரமான லாஷா போய் சேர்ந்தார். ஆனுல் அவர் எந்த நாட்டின் வழியே வந்தார் என்பது பிரிட்டிஷ் அரசுக்குத் தெரியாது. திபெத் அந்நியர்களை விரும்பியதில்லை. எனவே தன்னை ஒரு புத்த சமய சீடராக தலாய் லாமாவிடம் அர்ப்பணித்துக்கொள்ள ராகுல் விரும்பினுர். சம்ஸ் கிருதத்தில் 151 செய்யுள்கள் இயற்றினுர். அவற்றை போத் மொழியில் பெயர்த்து, அழகிய கையெழுத்தில் எழுதி, தலாய் லாமாவின் நம்பிக்கைக்குரியவரான என்கிரி—சாங்மூலம் அதை அனுப்பினுர். லாமா மகிழ்வடைந்தார்; ராகுலை ஒரு நாள் கூப்பிட்டு அனுப்புவதாக உறுதி கூறினுர். ஆனுல் அதை அடியோடு மறந்து விட்டார். ராகுல் டெபுங் கம்பா போனுர். அங்கு ஏழாயிரம் பிக்குகள் பல்வேறு காம்ஜான்களில், அதாவது வெவ்வேறு நாடு களைச் சேர்ந்தவர்கள் தங்குவதற்கென்று ஏற்பட்ட இடங்களில், வசித்தார்கள். ஆனுல் இந்தியர்களுக்கென்று தனி இடம் அங்கே இல்லை. அவர் 16,000 போத் வார்த்தைகளை, சிறுசிறு சீட்டுகளில், சேகரம் செய்து, அவற்றின் மொழி பெயர்ப்பை நேப்பாளியிலும் சம்ஸ்கிருதத்திலும் குறித்தார். அவர் ஆரம்பத்தில், மூன்று வருடங்கள் அங்கே தங்கியிருந்து, திபெத் மொழியில் மட்டுமே கிடைக்கிற புத்த சமய நூல்களைக் கண்டெடுத்து ஆராயவேண்டும் என்ற ஆசையோடுதான் வந்தார். ஆனுல், பொருளாதார நெருக் கடிகள் குறுக்கிட்டன. காசி வித்யாபீடத்தைச் சேர்ந்த ஆச்சார்ய நரேந்திர தேவா மாதந்தோறும் ஐம்பது ரூபாய் உதவித் தொகைக்கு ஏற்பாடு செய்தார். பாதாந்த் ஆனந்த கௌசல் யாயன், அபூர்வமான நூல்களையும் தாங்கா ஓவியங்களையும் வாங்கு வதற்கென்று, இலங்கையிலிருந்து மூவாயிரம் ரூபாய் அனுப்பி வைத்தார். ராகுல், மிகப் புராதனமான மகாவிகாராவைப் பார்ப்பதற்காக சாம்யே போனுர். நளாந்தாவைச் சேர்ந்த பிக்கு

சாந்தி—ரக்ஷிதாவின் உடல் அங்கு பாதுகாக்கப்பட்டு வந்தது. ஆனால் இக் கோயில்—ஆசிரமம் இடிந்து சிதைந்திருந்தது. பதினொன்றும் நூற்றுண்டில் இந்தியப் பண்டிதர்கள் வாழ்ந்து சம்ஸ்கிருத நூல்களை திபெத்தில் மொழிபெயர்த்த இடமான கே-கார்—லிங் (இந்தியப் பனி நிலம்) உருக்குலைந்து காணப்பட்டது. இந்த இடத்தில் பெரிய நூலகம் ஒன்று முன்பு இருந்தது. விக்கிரம சீலாவில் கூடக் கிடைக்காத மிக அரிய நூல்கள் அங்கு இருந்தன என்று தீபாங்கர் ஸ்ரீஞ்னன் குறிப்பிட்டிருந்தார். ஆனால் இந்த நூல் நிலையம் நெடுநாள்களுக்கு முன்பே தீயில் அழிந்துபோயிற்று. சம்ஸ்கிருத நூல் ஒன்றுகூட ராகுலுக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் ஒரு சில திபெத்தியக் கையெழுத்துப் பிரதிகளையும் ஓவியங்களையும் அவர் விலைக்கு வாங்கினார். அவர் சேகரித்த பொருள்கள் அனைத்தும் பதினெட்டு மட்டக் குதிரைகள்மீது ஏற்றப்பட்டு, காலிம்பாங் கொண்டுவரப்பட்டன. திரும்புகிற வழியில், ஷாலு விகார், டாஷா லம்போ, நார்தாங், நியான்ச்சி ஆகிய இடங்களில் சில புத்தகங்கள் அவருக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டன; மற்றும் சிலவற்றை அவர் விலை கொடுத்து வாங்கினார். கஞ்சூர், தஞ்சூர் தவிர, அவர் 1619 திபெத்திய கையெழுத்துப் பிரதிகள் கொண்டு வந்தார். லாஷாவிலிருந்து காலிம்பாங் திரும்புவதற்கு அவருக்கு, 1930 ஏப்ரல் 24 முதல் ஜூன் 3 முடிய, 39 நாட்கள் ஆயின. இப் புத்தகங்கள், எழுத்துப் பிரதிகள் எல்லாம் பாட்ணு மியூசியத்துக்கு அன்பளிப்பாக வழங்கப் பட்டன; அவை காசிபிரசாத் ஜெயஸ்வால் பகுதியில் பாதுகாக்கப் படுகின்றன.

இந்த திபெத்திய திரிபீடகங்களின் தந்திர மற்றும் சூத்திர கிரந்தங்களின் பட்டியல் ஜப்பானில் மட்டுமே, அதுவும் 1936-ல் தான் பிரசுரம் பெறுவது சாத்தியமாயிற்று. இதிலிருந்து, ராகுல் கஞ்சூர் மற்றும் தஞ்சூர் தொகுப்புகளை சேகரம் செய்த பணியின் முன்னேட்டத் தன்மையைத் தெரிந்துகொள்ளலாம். அவைபற்றி வேறு மொழிகளில் எதுவும் தெரியவில்லை. இப்படைப்பின் அபூர்வமான லாஷா பதிப்பை ராகுல் கொண்டு வந்தார். மதம், தத்துவம், வரலாறு, வாழ்க்கை வரலாறு, கலை, வானநூல், மருத்துவம், புவியியல் சம்பந்தமான அநேகம் திபெத்திய நூல் களையும் அவர் கொண்டு வந்தார். தத்துவ நூல்கள் பெரும் பாலானவை, பௌத்த சமயத்தின் இரு பெரும் தர்க்க ஞானி களான நாகார்ஜுனரின் மாத்யாமிகப் பிரிவையும், அசங்காவின் யோகச்சாராப் பிரிவையும் சேர்ந்தவையாகும். தாந்திரீக திபெத்திய நூல்கள் ஏழாம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரையிலான காலத்தில் எழுதப்பட்டவை. பத்மசம்பவா, புசிதான், தாராநாத் ஆகியோர் எழுதிய கிரியா,—தந்திரா சார்யா—

தந்திரா, யோக—தந்திரா நூல்களை ராகுல் எடுத்து வந்தார். இலக்கிய நூல்கள் பலவும் அவற்றில் இருந்தன: தண்டியின் காவிய தர்சாவுக்கு எல்நா—பா எழுதிய இரண்டு திபெத்திய விரிவுரைகள், கல்பலதாவின் இரு திபெத்திய மொழிபெயர்ப்புகள், பாணினியின் தாது—பதாவுக்கு துர்காசிங் எழுதிய விளக்கம், மற்றும் சில. வரலாற்று நூல் ஒன்று, முஸ்லிம்கள் மகதநாட்டின்மீது படை எடுத்து வெற்றிபெற்றதையும், உதந்தப்பூர், விக்கிரமசிலா பல்கலைக்கழகங்களை அழித்ததையும் விவரிக்கிறது. டாக்டர் ஏ. எஸ். ஆல்டேகர், புராதன இந்தியக் கல்வியின் வரலாறு பற்றிய தனது கட்டுரைகளில் அதை விவரமாகக் குறிப்பிட்டிருக்கிறார். பௌத்த மகாயானி மற்றும் வஜ்ரயானி தேவாலய முறைகளைத் திரைச்சீலைகளில் சித்திரிக்கும் 130 ஓவியங்களையும் ராகுல் கொண்டு வந்தார். 1934க்கும் 1938க்கும் இடையில் ராகுல் மூன்றுமுறை திபெத்துக்குப் போனார்; அங்குள்ள மடங்களிலிருந்து அபூர்வமான பொருள்கள் சிலவற்றை சேகரம் செய்தார். முதல் திபெத்திய இலக்கணத்தையும், மூன்று ஆரம்பப் பாடநூல்களையும் நாகரி எழுத்துக்களில் எழுதினார். தர்ம கீர்த்தியின் பிரமாண வர்த்திகா விளக்கவுரையை அவர் கொண்டு வந்தார்; திபெத் மொழியிலிருந்து அதை சம்ஸ்கிருதத்தில் திருத்தி எழுதினார். திபெத்திய இந்தி அகராதி ஒன்றை அவர் தொகுத்தார். அதன் முதல் பாகம், அவரது மரணத்திற்குப் பிறகு, சாகித்திய அகாடமியால் பிரசுரிக்கப்பட்டது.

ராகுலின் வாழ்க்கை வரலாற்றை தொடர்ந்து கூறுவோம். திபெத்திய யாத்திரைகள் மட்டுமே அவருடைய தனி வேலையாக இருந்ததில்லை. அவர் 1930ல் ஸ்ரீலங்கா சென்றார். 1931ல் சத்தியாக்கிரக இயக்கத்தில் கலந்துகொண்டார். அவர் 1931—32ல் மூன்றாவது முறையாக ஸ்ரீலங்கா போனார். 1932—33ல் அவர் ஐரோப்பாவில் ஒரு வருடம் கழித்தார். அங்கு இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி நாடுகளில் சுற்றினார்; இந்திய இயல் அறிஞர்கள் பலரை சந்தித்தார். 1933ல் ஜப்பான், கொரியா, மஞ்சூரியா நாடுகளில் பல மாதங்கள் செலவிட்டார். 1935ல் அவர் மஞ்சூரியா வழியாக ரயிலில் சோவியத் ரஷ்யா சென்றார். 1935 ஆகஸ்ட் 29லிருந்து ரயிலில் மாஸ்கோ போய் சேர்வதற்கு அவருக்கு ஏழு நாட்கள் ஆயின. செப்டம்பர் 4 முதல், செப்டம்பர் 21 முடிய அவர் இரண்டு வாரங்கள் ரஷ்யாவில் தங்கியிருந்தார். கல்வியாளர்களான ஓல்டன் பெர்கையும் செர்பாட்ஸ்கியையும் சந்திக்கவேண்டும் என்று அவர் பெரிதும் விரும்பினார். ஆனால் முதல் அறிஞர் இறந்துபோனார்; மற்றவர் லெனின்கிராடில் இருந்தார். அந்நகருக்குப் போவதற்கு ராகுல் அனுமதிக்கப்படவில்லை. அவர் மாஸ்கோவிலிருந்து ரயிலில் பாகு சென்றார். அங்கே

அங்கியம் கோயிலைக் (Fire-Temple) கண்டார். ராகுல் அதை ஜ்வாலாமாய் என்று குறிப்பிடுகிறார். அங்கு நாகரி எழுத்தில் இருந்த ஒரு கல்வெட்டைப் படித்தார். இந்த இடத்திலிருந்து கப்பலின்மூலம் ஈரானுக்குப் பயணமானார். டெஹ்ரான், ஷிராஸ், மஷீத் சென்றார். ரயிலில், பலுசிஸ்தான் மார்க்கமாய், லாகூர் வந்தார். டாக்டர் பிரபோத சந்திர பக்ஷி கல்கத்தா பல்கலைக் கழகத்திற்காக, ராகுலிடமிருந்து கஞ்சூர்-ஐ விலைக்கு வாங்கிக் கொண்டார்.

தனது சுயசரிதையில், முதல் முறையாகத் தனக்கு ஏற்பட்ட கடுமையான நோய் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அவருக்கு நாற்பத்து இரண்டாவது வயதில் டைபாய்டு கண்டது. பாட்னா ஆஸ்பத்திரியில் ஐந்து நாட்கள் அவர் தன் நினைவு இன்றிக் கிடந்தார். ஆயினும் அவர் 1936-ல் மீண்டும் திபெத்தில் இருந்தார்; 1937-ல் ஈரானிலும், 1937-38-ல் சோவியத் ரஷ்யாவிலும் இருந்தார். இம்முறை சோவியத் கலைக்கழகத்தின் (Academy) அழைப்பின் பேரில் ரஷ்யா சென்றார். மாஸ்கோவிலிருந்து அவர் லெனின் கிராட் போனார்; அங்கு 1937 நவம்பர் 17 முதல் 1938 ஜனவரி 13 முடிய தங்கினார். இங்கே இந்தோ-திபெத்தியப் பிரிவின் செயலாளராகப் பணியாற்றிய லோலா (எல்லினா நார்வர்தோவ்னா கோஸரோவ்ஸ்காயா) வைச் சந்தித்தார். திபெத்திய சமஸ்கிருத அகராதி ஒன்றைத் தயாரிப்பதில் அவள் ஈடுபட்டிருந்தாள். அவளுக்கு பிரஞ்சு, ஆங்கிலம், ரஷ்யன், மங்கோலிய மொழிகள் பேசத் தெரியும். ராகுல் அவளுக்கு சம்ஸ்கிருதம் கற்றுக் கொடுத்தார். அவள் அவருக்கு ரஷ்ய மொழி கற்பித்தாள். அவர்கள் நட்பு ஆழ்ந்த உறவாக வளர்ந்து, கல்யாணத்தில் முடிந்தது. அவர்கள் ஆரம்பத்தில் சம்ஸ்கிருதத்தில் காதல் கடிதங்கள் எழுதிக்கொண்டதாக அவள் இந்நூலாசிரியரிடம் தெரிவித்தாள். அவருடைய மகன் இகார் (அவனுக்கு அக்னி — ரஷ்யனில் 'ஓகான்' — என்று பெயரிட அவர் விரும்பினார்) 1938 செப்டம்பர் 5-ம் நாளில் பிறந்தான். ஆனால், ராகுல் 1945 ஜூலையில் மீண்டும் சோவியத் ரஷ்யா போனபோதுதான் அவனைப் பார்க்க முடிந்தது. இந்தப் பயணம் 1947 ஆகஸ்ட் 17 உடன் முடிவடைந்தது. அந்த வருடத்திற்குப் பிறகு அவர் தன் மனைவியையும் மகனையும் பார்க்க முடியாமலே போய்விட்டது. லோலா மறு மணம் புரிந்துகொள்ளவேயில்லை. 1962-ல், ராகுல், ஞாபகமறதி நோயினால் பீடிக்கப்பட்டிருந்தபோது, சோவியத் ரஷ்யாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டார். அவள் அவரைக் காண வந்தாள். மகா பண்டிதரின் கண்களிலிருந்து நீர் பெருகி ஓடியது. எவ்விதமான தகவல் தொடர்புக்கும் சாத்தியமில்லாது போயிற்று. இந்நூலாசிரியர் 1972 அக்டோபரில் லெனின்கிராடில் அவளைச் சந்தித்தார். ராகுலும் ஷேர்

பாத்ஸ்கியும் சேர்ந்திருந்த படங்களையும் இகாரின் சிறு பருவ போட்டோக்களையும் கொண்ட ஆல்பம் ஒன்றை அவள் காட்டினாள். லோலாவும் இகாரும் இந்தி பேசவில்லை; அவர்களிடம் ராகுல் எழுதிய புத்தகம் ஒன்றுகூட இல்லை. அவ்விருவரில் எவரும் இந்தியாவுக்கு வந்ததுமில்லை.

ராகுல் அரசியலில் தீவிரப் பங்கேற்றார். 1939-ல் பீகாரில் நடைபெற்ற விவசாயிகள் போராட்டத்தில் அவர் பூரணமாக ஈடுபட்டார். அவர் சிறையில் அடைக்கப்பட்டார். சிறையின் மோசமான நிலைமைகளை எதிர்த்து இரண்டு தடவை உண்ணாவிரதம் இருந்தார். ஒருமுறை 10 நாட்களும், மறுமுறை 17 நாட்களும், சில மாதங்களுக்கு விடுதலை பெற்றார். மோதிஹாரியில், 1940 பிப்ரவரி 24—25 தேதிகளில் நடைபெற்ற கிசான் சம்மேளனத்திற்கு அவர் தலைமை தாங்கினார். மீண்டும் கைதானார். 1940—42-ல் 29 மாதங்கள் அவர் ஹஜாரிபாக், தேவாலி சிறைகளில் இருந்தார். ராகுல், தர்ஷன்-திக்-தர்ஷன் (847 பக்கங்கள்) போன்ற மகத்தான நூல்களை எழுதுவதில் இத் தண்டனை காலத்தைச் செலவிட்டார். கிரேக்க, இஸ்லாமிய, ஐரோப்பிய, இந்திய தத்துவ முறைகளை விமர்சன ரீதியில் ஆய்வு செய்து, மார்க்சீயக் கண்ணோட்டத்தில் விளக்கவுரை தரும் இம் முயற்சியை அவர் முதல் முறையாக இந்தியில் எழுதினார். மூவாயிரம் வருடத்திய தத்துவ சிந்தனைகளை, ஒரு புதிய பகுத்தறிவுவாத—மனிதாபிமானக் கண்ணோட்டத்தில் ஆராயும் மிகப் பெரிய படைப்பு ஆகும் அது.

அயல் நாட்டு மற்றும் இந்திய தத்துவஞானிகளை ஒப்பிடும் அட்டவணை ஒன்றில், நவீன இந்திய சிந்தனையாளர்கள் இரண்டு பேரை மட்டுமே ராகுல் குறிப்பிடுகிறார்; அவர்களது சமகால அயல் நாட்டினர் பேர்களையும் தந்திருக்கிறார்.

ஹெகல் (1770-1831) — ராஜாராம் மோகன் ராய் (1774 – 1829)

மார்க்ஸ் (1818—83) — தயானந்த் (1824—83)

அயல் நாட்டு சிந்தனையாளர்களில் அநேகம் பேர்களின் பட்டியலையும் அவர்களது சாதனைகளையும் விவரித்திருக்கிறார்—தெக்கார்தே, ஸ்பினோஸா, லாக், பெர்க்லி, வால்டேர், ஹ்யூம், ரூசோ, கான்ட், ஃபிக்டே, ஷெல்லிங், ஷோபனர், ஃப்யூவர் பாக், ஸ்பென்சர், எங்கெல்ஸ், மாக், வில்லியம் ஜேம்ஸ், நீட்ஷே, பிராட்லி, பெர்க்ஸன், ஒயிட் ஹெட், லெனின், பெர்ட்ரண்ட் ரஸல் ஆகியோர் பற்றி எழுதியிருக்கிறார். இந்த மாபெரும் நூலுக்கு சான்று ஆதாரங்களாக அவர் சிறையில் பயன்படுத்திய நூல்கள் என ஏகப்பட்ட சம்ஸ்கிருதப் புத்தகங்கள், பாலி, அரபு மற்றும் பாரசீக நூல்களின் பெயர்களை குறிப்பிடுகிறார். தத்துவம்

பற்றி ஆங்கிலத்தில் எழுதியுள்ள நவீன இந்திய வரலாற்று ஆசிரியர் கள் மூன்று பேரை மட்டுமே அவர் குறிப்பிடுகிறார். எஸ். என். தாஸ்குப்தா, எஸ். ராதாகிருஷ்ணன், எஸ். சி. வித்யாபூஷண் ஆகியோரே அவர்கள். மார்க்ஸ், எங்கெல்ஸ், ஃபிரூவர்பாக், ஷெர்பாட்ஸ்கி இவர்களின் ஐந்து புத்தகங்களும் இப்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

சிறையிலிருந்து விடுதலையானதும் அவர் தனது சொந்த ஊருக் குப் போனார். முப்பத்துநான்கு வருடங்களுக்குப் பிறகு அவர் அங்கே போனதை மிக உணர்ச்சியோடு விவரித்திருக்கிறார். எவ் வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன; எனினும் மாற்றங்கள் இல்லாமலும் இருந்தன. அவரது குழந்தைப் பருவத்தில் அறிமுக மானவர்கள் எவ்வளவு பிரியத்துடன் அவரை வரவேற்றார்கள். அவருடைய முதல் மனைவி அவரைப் பார்க்க வந்தாள். ஆனால் அவளோடு திருமண உறவு நிறைவேறுவதற்குள் அவர் அவளை விட்டுப் பிரிந்து போய்விட்டார். அவர் திரும்பவும், 1942 முதல் 1944 முடிய இந்தியா முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். சில சமயம் அரசியல் வேலைகளுக்காகச் சுற்றினார்; இதர சமயங்களில் இலக்கியச் சந்திப்புகளுக்காகப் போனார். தனது நாட் குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு அவர் எழுதியிருக்கிற பயண விவரங்களைப் படிக்கிறவர்கள், ஒரு விசித்திரமான மனசை சந்திக்க நேரிடும். ஒரு இடத்தில் பதினெட்டு வகையான நேப்பாளிப் பேய் பிசாசு களின் பட்டியல் தரப்படுகிறது; மற்றொரு இடத்தில் பதினொரு வகை திபெத்தியப் பிசாசுகள் விவரிக்கப்படுகின்றன. பேச்சு வழக்குகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் பற்றி விரிவாக எழுதப்பட்டுள்ளன. அவருடைய எழுத்துக்கள், பூர்வகுடி கலா சார இயல், சமூக இயல், பொருளாதார நிலைமைகள், மொழி இயல், பிரயாணச் சிரமங்கள், பூகோள சாஸ்திர மற்றும் புவி இயல் விஷயங்கள், அரசியல் நெருக்கடிகள், தொல் பொருள் இயல், மத வரலாறு, பிரசித்திபெற்றிராத மத நம்பிக்கைகள் மற்றும் பலவிதமான நம்பிக்கை முறைகள் முதலியன பற்றிய தகவல் களஞ்சியமாகவே விளங்குகின்றன. எல்லாம் ஒரே மூட்டை யில் கலந்து கிடக்கின்றன. இத்தகவல்களை அவர் வெகு சுவை யாகவும் தன்னியல்பாகவும் பேசுகிற நடையில் சொல்லிக்கொண்டு போகிறார். தேவையில்லாத விவரணைகளால் சிரமப்படுகிற அல்லது அலுப்படைகிற உணர்வு வாசகருக்கு ஏற்படுவதேயில்லை.

1948க்குப் பிறகு, ராகுல் பெரும்பாலும் இந்தியாவிலேயே தங்கினார். சீனாவுக்கு ஒரு பயணமும், ஸ்ரீலங்காவில் கற்றுக் கொடுக் கும் வேலை நிமித்தம் ஒரு தடவையும் போய் வந்தார். இப் பயணங்களுக்குப் பிறகு அவர் நோய்வாய்ப்பட்டார். அவருடைய

கடைசிப் பயணம் சோவியத் ரஷ்யாவுக்கு ஞாபகமறதி நிலையிலேயே நிகழ்ந்தது. இந் நூலாசிரியருக்கும் அவருக்கும் 1944-ல் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. 1948-ல் அவருடன் சேர்ந்து அகராதி தயாரிக்கும் பணியில் உழைத்தார். இந்த எழுத்தாளருடன் ராகுல் 1944-ல் உஜ்ஜயினியிலும், 1950-ல் அலகாபாத்திலும் தங்கியிருந்தார். இவ் ஆசிரியரும் அவர் குடும்பத்தினரும், மூன்று விடுமுறை காலங்களில், நயினிடால், டார்ஜிலிங், காலிம்பாங், குமவான், மசூரி ஆகிய இடங்களில் ராகுலின் விருந்தினராகத் தங்கினார்கள். அவர் இந்த ஆசிரியரின் நெருங்கிய நண்பராஞர்.

அவர் கடுமையான நீரிழிவு நோயினால் சிரமப்பட்டார். மிகையான வேலையும், சொந்தக் கவலைகளும் அவரது நோயை அதிகப் படுத்தின; அதனால் அவர் தனது இறுதி ஆண்டுகளில் ஞாபக சக்தியை இழக்க நேர்ந்தது. இத்தகைய பெரும் கல்விமான் தன்னுடைய பெயரைக்கூட வாசிக்கமுடியாமல் போனதும், தொடர்ச்சியாய்ப்பேச இயலாதிருந்ததும் மிகக் கொடிய காட்சியா யிற்று. இவ்விதமான தனிப்பட்ட அதிர்ச்சிகளுக்கும் செயலற்றுப் போகிற நிலைகளுக்கும் உரிய காரணங்களை அறிந்துகொள்ள முடிவதேயில்லை. 'நிராலா' அவரது கடைசி நாட்களிலும், காஸி நஸ்ருல் இஸ்லாம் அவருடைய பிந்திய 34 வருடகாலமும் இதே மாதிரி கஷ்டப்பட்டார்கள். மகா பண்டிதரும் படைப்பாளியு மான ராகுலின் அமைதியற்ற இயல்பு பரிதாபகரமான ஒரு முடிவை அடைந்தது. அவருக்கு உரிய கவனிப்பும், நியாய மாகக் கிட்டவேண்டிய ஓய்வும் கிடைக்கவில்லை என்றே தோன்று கிறது. அவர் காலம் தாழ்த்தே கல்யாணம் செய்துகொண்டார். அவருடைய சிறு குழந்தைகளைப்பற்றிய கவலை அவர் உள்ளத்தை அரித்தது. அரைவாசி ஊமையாக இருந்த கடைசி நாட்களில் அவர் 'இரண்டு குழந்தைகள் . . . மூன்று குழந்தைகள்' என்று சதா முணுமுணுப்பது வழக்கம். ஒருவேளை அவரது உள்ளத்தின் வேகத்திற்கு அவர் உடல் ஈடுகொடுக்க முடியாமல் இருந்திருக்க லாம்; மருந்துகளின் துணையோடு எப்பொழுதும் முன்னைப்போலவே தீவிரமாக உழைக்கமுடியும் என்ற மயக்கத்தில் அவர் கடுமையாக உழைத்திருக்கக்கூடும். அவரது இந்தக் கடைசிக் கட்டம்பற்றி அவருடைய மனைவி கமலா சாங்கிருத்யாயன் மட்டுமே ஆதார பூர்வமாக எழுதமுடியும். ஆனாலும், என்னதான் சொன்னாலும் யூகித்தாலும், உண்மை எப்போதும் விலகியே நிற்கும். மரணம், பரிகாசம் பண்ணும் பைலேட் போல (ஏசுவை விசாரித்த நீதிபதி) ஒரு விடைக்காகக் காத்திருக்கவில்லை.

தனிநபர் என்ற தன்மையில், அவர் தயாள குணத்தோடும், அன்போடும் நடந்துகொண்டார். சுய கட்டுப்பாடும் உயர்ந்த

ஒழுக்கசீலமும்கொண்ட அவர் ஒரு நாளைக்கு பதினெட்டு மணி நேரம் உழைக்க முடிந்தது. அவரது தேவைகளும் பொழுது போக்குகளும் குறைவானவையே. மிக எளிய உடையையும் உணவையும் அவர் உபயோகித்தார். நண்பர்களுக்கும், இளைய படிப்பாளிகளுக்கும் அதிக அளவு உதவினார். ஒளிவுமறைவு இன்றிப் பேசினார். அச்சமற்று வாழ்ந்தார். பதவியிலும் செல்வாக்கிலும் வெகுவாக உயர்ந்திருந்தவர்களை விமர்சிக்கவும், அவர்கள் மனதைப் புண்படுத்தவும் அவர் தயங்கவேயில்லை. அவருடைய கொள்கைகள் விஷயமாகப் பேச நேர்கையில், அவர் வெளிப்படையாகப் பேசினார்; உண்மையைச் சொல்வதில் அவர் பூசிமெழுகியதில்லை.

அவர் தனது ஓய்வு நேரத்தைப் பெரும்பாலும் எழுதுவதிலும் படிப்பதிலும் ஈடுபடுத்தினார். எழுத்தில் அவர் வேகமும் கோபமும் காட்டியபோதிலும், தனிப்பட்ட முறையில் மென்மையாகவும், வார்த்தைகளை நிதானமாகவும் பேசுகிறவராகவே இருந்தார். அவர் பெரிய மேடைப் பேச்சாளர் அல்லர். முப்பத்துநான்கு, அல்லது அதற்கும் அதிகமான மொழிகளை அறிந்திருந்தபோதிலும், அவர் அநேகமாக சம்ஸ்கிருதத்தையும் இந்தியையும் தான் எழுதவும் பேசவும் பயன்படுத்தினார். பேச்சிலும் புத்தகங்களிலும் அவர் உபயோகித்த மொழி மிக எளியதாக இருந்தது. அவர் எப்போதும் சாதாரண வாசகனை தன் நினைவில் கொண்டிருந்தார். சில சமயம் அவர் எழுத்தில் ஒரு தீவிர உற்சாகியின் அல்லது ஒரு மதப்பிரசாரகனின் ஒருபக்கச் சார்பு காணப்படும்; ஆனால் அவருக்குக் கொள்கைவெறி என்பது இருந்ததில்லை. மிகத் தாழ்ந்த நிலைகளிலிருந்து மேனிலை அடைந்த ஒருவருக்கு, பெரும்பாலும் தானாகவே கற்றுத் தேர்ந்தவருக்கு, இத்தகைய முற்போக்கான, பகுத்தறிவுரீதியான, மதச்சார்பற்ற, மனிதாபிமான நிலையைப் பெறுவதும் போற்றி வளர்ப்பது என்பதும் உண்மையிலேயே விசேஷமான ஒரு சாதனை தான். மறைபொருள் வாதிகள், மாயாவாதிகள், போலி ஆன்மீகவாதிகள் சம்பந்தமான குறிப்புகளில் அங்கும் இங்குமாக அவர் கடுமையான வார்த்தைகளை உபயோகித்திருக்கிறரே தவிர, ராகுல் எவரையும் வெறுப்பவர் இல்லை. விஷயங்களின் மறுபக்கத்தைப் பார்க்கவும், ஒவ்வொன்றிலும் ஏதாவது நல்லதைக் கண்டுபிடிக்கவும், விழுங்கமுடியாததாகவும் விநோதமானதாகவும் தோன்றியதைக்கூடப் புரிந்துகொள்ளவும் அவர் முயன்றார். புத்தரின் கொள்கையான கருணையைக் கற்றுத் தேர்ந்ததின் விளைவாகப் பிறந்த அனுதாப உணர்வு உள்ளார்ந்து இருப்பதனால், அவருடைய வாழ்வும் இலக்கியமும் வாசகரிடம் ஒரு ஆழ்ந்த, நிலையான பாதிப்பை ஏற்படுத்துகின்றன. நம்மைச் சுற்றியுள்ள உலகத்தின் கலப்பான நிகழ்வுகளைப் புரிந்து

கொள்ள ராகுல் முயன்முர். இச்செயல் முறையில், சமநிலையும் ஒருங்கிணைப்புங்கொண்ட ஒரு புதிய சுய மனிதனைத் தேடினார்.

ராகுல் கற்பனலங்காரவாதியோ, மிகை உணர்ச்சிவாதியோ அல்லர். இதர மனிதர்களுடன், அவர்கள் மேலானவர்களோ மூத்தவர்களோ, சமமானவர்களோ இளையவர்களோ, யாராக இருப்பினும், அவர் ஒரு நண்பன்போல, உண்மையைத் தேடும் ஆத்மாபோல் பழகினார். அவர் இருண்ட நோக்கினருமல்ல, குறை கூறுபவருமில்லை. துமாரி க்ஷாயா என்ற அவருடைய நூலில் செய்திருப்பதுபோல, சில அமைப்புகளையும் மனித விக்கிரகங்களையும் எதிர்த்து மறுக்கும் போக்கை அவர் தீவிரமாக ஆதரிக்கிறார். அரசியல் ஹாம்லெட்டுகளை (துன்முன் என்ற போஜ்புரி நாடகத்தில்) அவர் கேலி செய்கிறார். ஆண்மீது பெண் செலுத்துகிற ஆதிக்கத்தை மிக நளினமான நகைச்சுவையோடு விவரிக்கிறார்; அதன்மூலம், புனித ஆசாமிகள் என்று சொல்லிக்கொள்கிற போலி நபர்களின் பொய்யான உபதேசங்களுக்கும் நேர்மாறான செயல்களுக்குமிடையேயுள்ள முரண்பாடுகளை வெளிப்படுத்துகிறார். ஆனல், எல்லா இடத்திலும் சுய அறிவு ஒளி வீசுகிற ஒரு ராகுலின் கருணைமுகம் எப்போதும் மறைந்து இருக்கிறது; எனினும் அது முற்றுக மறைந்துவிடுவதுமில்லை.

# படைப்புகள்

அவருடைய எழுத்துக்கள் அனைத்தையும் விவரிக்கும் ஒரு அட்டவணை கூட இச் சிறு புத்தகத்திற்குள் அடங்காதது ஆகிவிடும். நாம் அவரது இலக்கியப் படைப்புகளை, சுயசிருஷ்டிகள் மற்றும் விமர்சனரீதியானவைகளை, மட்டும் மேலோட்டமாகக் கவனிப்போம். இலக்கியம் என்பது, அதன் பரந்த பொருளில், மனிதர்கள் பற்றிய பலவற்றையும் தன்னுள் கொண்டதாகும். போகிற போக்கில், தத்துவம், வரலாறு, சமூக இயல் முதலியவை தொடர்பானவை மீதும் சிறிது கவனம் செலுத்துவோம். அவர் 1927 முதல், அவருடைய முப்பத்து நான்காவது வயதில், எழுதத் தொடங்கினர். 1961-ல், கடுமையான நோய்வாய்ப்படுகிற வரை எழுதிக்கொண்டிருந்தார். 'அவர், ஏறக்குறைய ஒரு கடிகாரம் மாதிரி, தனது எழுத்து வேலைகளில் ஒழுங்காகச் செயலாற்றினர்' என்று பிரகாஷ் சந்திர குப்தா எழுதினர். இப்படி உழைத்ததில், இந்த 34 வருடங்களில், ராகுல் 50,000 பக்கங்கள் பிரசுரித்திருக்கிறார். பன்னிரண்டு கையெழுத்துப் பிரதிகள் பிரசுரமாகாமல் இருக்கின்றன. இது பாராட்டுதலுக்கு உரிய ஒரு சாதனைதான். அயல் நாடுகளுக்கு ஆபத்தான பயணங்கள் செய்த நாட்கள், அவர் வெளி நாடுகளில் தங்கிய வருடங்கள், சிறையில் மோசமான நிலைமைகளில் அவர் கழிக்க நேரிட்ட காலம் இவற்றை எல்லாம் கருதுகிறபோது, இச்சாதனை மிகப் பெரிதேயாகும். சதா ஊர் சுற்றிக்கொண்டிருந்த ஒருவரின் இத்தகைய பரந்த எழுத்துக்களின் தன்மை வியப்பை அளிக்கக்கூடியதே. அவர் மிக வேகமாகவும், சோர்வில்லாமலும் எழுதக்கூடிய எழுத்தாளர். எழுதுவதற்குத் தகுந்த மனநிலை அல்லது வசதியான சூழ்நிலைகள் தேவை என்று அவர் ஒருபோதும் காத்திருந்ததில்லை. ரயிலில் அல்லது கப்பலில் போகிறபோதும், பஸ் நிலையங்களிலும், சத்திரம் சாவடிகளிலும், முகாம்களிலும், வீட்டிலும், சஞ்சாரங்களின்போதும் அவர் எழுதினர்.

## கற்பனைப் படைப்புகள்

கற்பனைப் படைப்பு என்ற இனத்தில் சேரக்கூடிய பதின்மூன்று புத்தகங்களை ராகுல் எழுதினர். சிம்க சேனபதி, ஜெய் யௌதேயா

(இந் நூலாசிரியர் இவற்றை 1938-ல் விசால் பாரத் சஞ்சிகையில் விமர்சித்து எழுதியுள்ளார்), விஸ்மிரித் யாத்ரி, திவோதாஸ், மாதுர் ஸ்வப்ந போன்ற சரித்திர நாவல்கள் அவற்றில் குறிப்பிடத் தக்கவை. முதல் மூன்றும் புராதன மற்றும் மத்தியகால இந்தியா பற்றியவை. திவோதாஸ் என்பது வேதகால ஆரியர்களின் வாழ்வு முறை பற்றிய கற்பனைக்கதை. கடைசி நாவல் பாரசீகத்தின் பூர்வ வரலாறு சம்பந்தப்பட்டது. ராகுல் இரண்டு சமூக நாவல்கள் தான் எழுதினார். ஒன்று ஜீனே கே லியே. 1914-ல் நிகழ்ந்த முதல் உலக மகாயுத்தத்தில் கலந்து போராடிய குடியானவப் போர் வீரன் ஒருவன் பின்னர், நிலப்பிரபுத்துவம், மானிய முறை, ஏகாதிபத்தியம் ஆகியவற்றை எதிர்த்துப் போரிடும் புரட்சி இயக்கத்தில் சேர்கிறான். அதைச் சித்திரிக்கிறது இந்த நாவல். 1939 முடியத் தான் இதன் காலகட்டம் அமைந்துளளது. மற்றொரு நாவலான ராஜஸ்தானி ராணிவாஸ், ராஜஸ்தானத்து அரண்மனை களிலும் அந்தப்புரங்களிலும் அடிமைப் பெண்களாய் பணிபுரிந்த மகளிரின் துயர நிலைமைகளை விவரிக்கிறது. இன்னும் இரண்டு கற்பனைக்கதைகள் சமூக நாவல்கள் எனக் கூறப்படலாம். ஒன்று, பால்ஸாவின் ஸாதி (இருபத்தி இரண்டாவது நூற்றாண்டு) என்பது கனவு உலகம் (கற்பனை பூமியான 'உட்டோபியா') பற்றியது. மற்றது, பாகோ நஹி, துனியா கோ பாத்லோ! (பயந்து ஓடாதே! உலகத்தை மாற்று). இது உரையாடல் முறையில், பேச்சுவழக்கு நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

நான்கு சிறுகதைத் தொகுதிகள் வெளிவந்துள்ளன. இவற்றில் ஸாத்மி கே பச்சே என்பது, வறுமையையும் சமூக நிலைமைகளையும் எதிர்த்துப் போராடியவாறு சோகமய வாழ்வு வாழ நேரிட்டுள்ள குழந்தைகளைப் பற்றிய உருக்கமான உண்மைக் கதைகளைக் கொண்டிருக்கிறது. அவை அநேகமாக உண்மையான கிராம வாழ்க்கையிலிருந்து அப்படியே எடுத்தெழுதப்பட்ட சித்திரங்கள் ஆகும். அவற்றில் கார்க்கியின் சமூக யதார்த்தப் பண்பு கலந்து காணப்படுகிறது. ஒரு நல்ல புத்தகத்தைவிட ஒரு கெட்ட மனிதன் உயர்ந்தவன் என்று கார்க்கி லெனினுக்கு எழுதியது நினைவுகூரத் தகுந்தது. இக் கதைத் தொகுதியில் ''ஸ்மிருதி ஞான கீர்த்தி'' என்றொரு சரித்திர சம்பந்தமான கதையும் இருக்கிறது.

அவருடைய வேறு இரண்டு சிறுகதைத் தொகுப்புக்கள் இரண்டு அரண்மனைகளின் சமூக, வரலாற்று நிலைமைகளைச் சித்திரிக்கின்றன. பகுரங்கி மதுபுரி என்பது ஆடம்பரம் மிகுந்த மசூரி சம்பந்தமான இருபத்தோரு கதைகளைக் கொண்டுள்ளது. இதி லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒன்பது கதைகள் ரூபி என்ற பெயருடன் தனிப்புத்தகமாக வந்திருக்கின்றன. மற்றொரு தொகுதி

யின் பெயர் கனெய்லா கி கதா என்பதாம். இது கதா அல்லது விவரணை என்ற தவறான தலைப்பைப் பெற்றுவிட்டபோதிலும், இந்தப் புத்தகத்தில், கி.மு. 1300 முதல் கி.பி. 1957 முடிய வாழ்க்கை வளர்ந்துள்ள விதத்தைக் கூறுகிற ஒன்பது கதைகள் இருக்கின்றன. இது வங்க மொழிபெயர்ப்பு ஒன்றில் ''வால்கா முதல் கங்கை வரை இரண்டாம் பாகம்'' என்று பெயரிடப் பட்டுள்ளது.

ராகுலுக்கு நிரந்தரமான புகழைத் தேடித்தந்த மிக முக்கிய மான சிறுகதைத் தொகுதி வால்கா ஸே கங்கா (வால்கா முதல் கங்கை வரை) என்பதுதான். வேதகாலத்திற்கு முந்திய நாட்களி லிருந்து இன்றைய இந்தியாவின் 1944-ம் வருடம் வரை சம்பந்தப் பட்ட இருபது கதைகள் இதில் இருக்கின்றன. பதினொன்கு கதைகள் புராதன மற்றும் மத்தியகால இந்தியா பற்றியது; பதினைந்தாவது கதையிலிருந்து இந்தியாவில் முஸ்லிம் ஆட்சி, பிரிட்டிஷ் ஆட்சி இவற்றின் பின்னணி ஆரம்பிக்கிறது. வரலாற்றின் குறிப்பிட்ட ஒரு காலகட்டத்தை எடுத்துக்கொண்டு, குறிப்பிட்ட ஒரு கற்பனைச் சம்பவத்தை புதிதாக அமைத்து, அதை இயங்கியல் பொருள் முதல் வாதக் கண்ணோட்டத்துடன் ஆய்வு செய்ய ராகுல் முயன்றிருக் கிறார். சில சமயங்களில், காளிதாசனை நில உடைமைக் கவிஞன் என்று கூற முனைகையில் அல்லது போலியான இந்து முஸ்லிம் ஒற்றுமையைக் காட்ட முயல்கையில், ஆசிரியரின் வெறுப்பான போக்கு அவருடைய பரந்தநோக்கை மீறி மேலெழுந்து விடுகிறது. ஆயினும், திட்ட அமைப்பிலும் செயல்பாட்டிலும், இந்த ஒரு படைப்பு தற்கால இந்தி எழுத்து இந்திய இலக்கியத்துக்கு அளித் துள்ள பெரும் சாதனையாகத் திகழ்கிறது.

## வாழ்க்கை வரலாறும் சுயசரிதையும்

அவருடைய சுயசரிதை ஐந்து பாகங்கள்; பூரணமான வாழ்க்கை வரலாறுகளும், வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளின் தொகுப்புகளுமாகப் பதினேழு பாகங்கள் — இவை ராகுலின் உரைநடை எழுத்துக்களில் மற்றுமொரு பெரும்பகுதி ஆகும்.

சுயசரிதை 2814 பக்கங்கள் கொண்டுள்ளது. ''உண்மையில் இது, தனிநபர்களாலும் குழுவினராலும், இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் உருவாக்கப்பட்ட அரசியல், சமூக, இலக்கிய, வரலாற்று நிலைமைகள் பற்றிய களஞ்சியமேயாகும். இது ராகுல் பற்றி வெகு குறைவாகவும், மற்றவர்கள்பற்றி அதிகமாகவும் கூறுகிறது'' என்று காலம் சென்ற சிவசந்திர சர்மா இதைப்பற்றி எழுதியுள்ளார்.

மற்றும் நான்கு தொகுதிகள் இயல்பினுல் அதிகமாக சுயசரிதை ரீதியிலேயே உள்ளன. அவை அவருடைய பிள்ளைப் பிராய நினைவுகளைக் கூறுகின்றன. பச்பன் கி ஸ்மிருதியான் இவற்றில் சேரும். அதித் ஸே வர்த்தமான் அவர் சந்தித்துத் தொடர்பு கொள்ள நேர்ந்த முக்கியமான வரலாற்றுப் பிரமுகர்கள், பெரிய சிந்தனையாளர்கள் பற்றிய நினைவுகளையும், கட்டுரைகளையும் கொண்டிருக்கிறது. அவருடைய ஒத்துழையாமை இயக்க கால சகாக்கள் பற்றிய நினைவுகள் மேரே அசகாயயோக் கே சாத்தியில் உள்ளன. அவரோடு நெருங்கிய தொடர்புகொண்டிருந்த ஐம்பத்தைந்து பேர்களுக்கு அவர் செலுத்தும் அஞ்சலி ஜின்கா மேன் கிரிதஞ்ஞுவில் காணப்படுகிறது.

வரலாற்று ஒழுங்கில், இதர வாழ்க்கை வரலாறுகளின் விவரம்: மகா புத்தர் பற்றிய மகா மானவ புத்தா, சிங்களத்தின் ஏழு பெரிய மனிதர்கள் பற்றி சிங்கள் கே வீர் புருஷ், மற்றும் சிங்கள கூமாக்கார் ஜெய்வர்தன், சர்தார் பிருத்விசிங், கூமாக்கார் ஸ்வாமி (ஹரிசரணனந்தர்), வீர் சந்திரசிங் கார்வாலி, கப்தான் லால் (ஜஸவந்த் சந்திரா). வாழ்க்கை வரலாற்றுச் சித்திரங்களின் மிக மதிப்பு வாய்ந்த தொகுப்பு நவ இந்தியாவின் புதிய தலைவர்கள் பற்றிய நயே பாரத் கே நயே நேதா இரண்டு பாகங்கள் ஆகும். காஷ்மீர் சிங்கம் ஷேக் அப்துல்லா, தோழர்கள் யூசுப், பரத்வாஜ், எஸ். ஜி. சர்தேசாய், சுவாமி சகஜானந்த், எஸ். ஏ. டாங்கே, கல்பனு தத்-ஜோஷி, பங்கிம் முக்கர்ஜி, பி. சுந்தரய்யா, கே. கேரளீயன், ஆர். பி. மூர், டாக்டர் ஜி. அதிகாரி, டாக்டர் கே. எம். அஷ்ராப், பி. சி. ஜோஷி, எஸ். எஸ். பாட்லிவாலா, முகம்மத் ஷாகித், சையத் ஜமாலுதின் புகாரி, பஸ்ல் இலாஹி குர்பான், முபாரக் சாகர், டாக்டர் இஸட். ஏ. அகமத், மகமது ஜப்பார், 'நிராலா', பந்த், மற்றும் பலரின் வாழ்க்கைக் குறிப்புகள் இதில் இடம் பெற்றுள்ளன. இப் புத்தகத்திற்காக ராகுல் ஒவ்வொருவரையும் பேட்டி கண்டு, அவரவருடைய குடும்ப வரலாறு, பிள்ளைப் பருவம், வாழ்வுத் தொழில், சமூக-அரசியல் போராட்டங்கள் மற்றும் செயல்கள் பற்றிய விவரங்களை சேகரித்தார். இந்தியாவின் சோஷலிஸ்ட் சிந்தனை இயக்கத்தின் வரலாறு சம்பந்தமாக ஆய்வு செய்கிறவர்களுக்கு இது மதிப்புமிகுந்த ஆதார நூலாகப் பயன்படும். துரதிர்ஷ்டவசமாக, இந்தப் புத்தகம் இப்போது கிடைப்பதில்லை. பல வருடங்களாக இதன் மறுபதிப்பு அச்சிடப்படவேயில்லை.

கார்ல் மார்க்ஸ், லெனின், ஸ்டாலின், மா-சே-துங் ஆகியோர் பற்றி இந்தியில் முதலாவதாக வந்த ஆதாரபூர்வமான வாழ்க்கை வரலாறுகள் என்று ராகுல் எழுதிய தீர்மானமான நான்கு தொகுதிகள் இருக்கின்றன. மா-சே-துங்கின் 357 பக்க வாழ்க்கை

வரலாற்றின் முன்னுரையில் ராகுல் 1956-ல் இப்படி எழுதியிருக்கிறார்: ''மா ஆசியாவுக்கு, ஆசியாவில் சைனுவுக்கு, சொந்தமானவர். சைனு பன்னெடுங்காலமாக இந்தியாவோடு கலாசாரப் பிணைப்புகளும் உறவுகளும் கொண்டிருக்கிறது. மார்க்சிசத்தை செயல்படுத்துவதில் ஒவ்வொரு நாட்டிலும், அதன் மேதமைக்கும் நிலைமைகளுக்கும் ஏற்றபடி, முறைகள் வித்தியாசப்படும். அது சிரமமான பணிதான். ஆனாலும், அதை இப்படிச் சொல்லலாமே: ஒரு நாட்டில் மார்க்சிசத்தை செயல்படுத்துவதற்கு மார்க்ஸ், எங்கெல்ஸ், லெனின், ஸ்டாலின், மா போன்ற மேதைகள் தேவைப்படுகிறார்கள். ஒவ்வொரு நாட்டிலும் புரட்சிக்கான சக்திகளும், புதிய நிர்மாணத்தின் சக்திகளும் நிலை பெற்றுள்ளன; சில சமயங்களில் சந்தர்ப்பங்களும் முற்றிக் கனிந்திருக்கின்றன. ஆனால் ஒரு வெற்றிகரமான புரட்சிக்குத் தலைமைதாங்கி நடத்தக்கூடிய பெரிய மனிதர்கள் இல்லாமல் போகிறார்கள். அவசியம் ஏற்படுமானால், அப்படிப்பட்ட ஒரு மேதை வருங்காலத்தில் நிச்சயம் பிறப்பான். நம் நாட்டிற்கு மாவின் வாழ்க்கை அநேக பாடங்களைக் கற்பிக்கிறது.'' இந்த மேற்கோளிலிருந்து, ராகுல் வெளிப்படையான மார்க்சிஸ்ட் என்பதும், புகழவோ எவரிடமிருந்தும் லாபம் பெறுவதற்காகவோ ஒருபோதும் அவர் எதையும் எழுதியதில்லை என்பதும் தெளிவாகப் புலனாகிறது. உண்மையில், ராகுல் தனது சோஷலிச தத்துவத்தை புத்தகங்களிலிருந்து கற்றுரில்லை; வாழ்க்கையிலிருந்தே கற்றுக்கொண்டார். அவர் சாய்வு நாற்காலிக் கொள்கைவாதியோ, வரவேற்பு அறைப் பண்டிதரோ அல்லர்.

அவரது படைப்பு எழுத்தின் மற்றொரு பகுதி பரந்த அளவில் அவர் மேற்கொண்ட பயணங்களின் அனுபவ விவரிப்புகள் ஆகும். இந்த இனத்தில் பதின்மூன்று புத்தகங்களைச் சேர்க்கலாம்:

1. மேரி லடாக் யாத்ரா—மீரட்டிலிருந்து, பஞ்சாப், மூல்டான், டேரா காஜி கான், எல்லைப்பிரதேசம், பஞ்ச் மாநிலம், காஷ்மீரம், ஜோஷிலாக் கணவாய் வழியாக லடாக் போனதை விவரிக்கிறது. லாகால், குல்லூ வர்ணனைகளும் இதில் சேர்ந்துள்ளன. இது 1939-ல் எழுதப்பட்டது.

2. லங்கா — அனுராதபுரம், பொலன்னருவை, கொழும்பு பற்றிய விவரிப்புகளும், அவற்றின் வரலாற்றுக் குறிப்புகளும் கொண்டுள்ளது. இது ராகுல் யாத்ராவழி—முதல் பாகத்திலும் இணைக்கப்பட்டிருக்கிறது.

3. மேரி யூரோப் யாத்ரா—1935-ல் பிரசும் பெற்றது. அவர் பாதந்த் ஆனந்த கௌசல்யாயனுடன் சேர்ந்து கொழும்பிலிருந்து

1932-ல் லண்டன், பாரிஸ், ஜெர்மனிக்குச் சென்ற பயணத்தைக் கூறுகிறது.

4. மேரி திபெத் யாத்ரா—1937-ல் வெளிவந்தது. லாலொ, சங், சாக்யா, நே நாம், நேப்பாளம் முதலிய பயணங்கள்பற்றிய அவருடைய டயரிக் குறிப்புகளிலிருந்து தொகுக்கப்பட்டது.

5. யாத்ரா கே பன்னே — 1952-ல் பிரசுரிக்கப்பட்டது. ராகுல் மூன்றுவது முறையாகத் திபெத் போனதுபற்றிய விவரங்கள், ராஜஸ்தான் பயணம்பற்றிய குறிப்புகளின் பகுதிகள், பாதந்த் ஆனந்த கௌசல்யாயனுக்கு எழுதிய கடிதங்கள் இதில் அடக்கம்.

6. ஜப்பான் — ராகுலின் சிங்கப்பூர், ஹாங்காங், ஷாங்காய், கோபெ, டோக்கியோ, கொயாசான் பயணங்கள் பற்றியது.

7. ஈரான் — (இரண்டு பாகங்கள்) முதல் பாகம் புராதன பாரசீகம்பற்றிக் கூறுகிறது. இரண்டாவது பாகம் தற்காலப் பாரசீகம் பற்றியது. சோவியத் ரஷ்யாவில் உள்ள பாகுவிலிருந்து திரும்பியபோது, ராகுல் டெஹ்ரான், இஸ்பகான், ஷிராஸ் போனூர்.

8. ருஸ் மேன் பச்சீஸ் மாஸ் (ரஷ்யாவில் இருபத்தைந்து மாதங்கள்) — முதலில் பிகானீரில் 1952-ல் பிரசுரிக்கப்பட்டது. பிறகு 1967-ல் இது மேரி ஜீவன் யாத்ரா (மூன்றும் பாகம்) என்ற பெயரில் மறுபிரசுரம் பெற்றது.

9. கின்னூர் தேஷ் மேன் — பிரயாகையிலிருந்து 1948-ல் வெளியிடப்பட்டது. இரண்டாம் பதிப்பு 1956-ல் அலாகாபாத்தில் பிரசுரிக்கப்பட்டது. இது ராகுல் கின்னூர், இமாசலப் பிரதேசம் போனதை விவரிக்கிறது.

10. திபெத் மேன் ஸவா வர்ஷ — 1933-ல் டில்லியிலிருந்து வெளிவந்தது. இது ராகுல் யாத்ராவழி முதல் பாகத்தில் மறு பிரசுரம் பெற்றது.

11. கூமாக்கார் சாஸ்த்ரா (ஊர் சுற்றும் அறிவியல்) — நாடோடியாக அல்லது சர்வ காலமும் ஊர்சுற்றித் திரிய விரும்புகிறவர்களுக்குக் கையேடு ஆகப் பயன்படக்கூடிய மிக சுவாரஸ்யமான புத்தகம்.

12. ஆசியா கே துர்காம் பூ—கந்தோன் மேன் (ஆசியாவின் பயணம் செய்ய முடியாத பகுதிகளில்) — அவருடைய இரண்டாவது திபெத் பயணம்பற்றிய விவரிப்புகள்.

13. சீன் மேன் க்யா தேகா? (நான் சைனுவில் என்ன கண்டேன்?) — புதிய சைனுபற்றிய அவரது உற்சாகமான விவரணைகள் கொண்டது. அங்கே அவர் 1958-ல் போனூர்.

இப் புத்தகங்கள் தவிர, இமாலயம்பற்றிய புத்தக வரிசைகள் வேறு இருக்கின்றன. டார்ஜிலிங், குமாவான், கார்வால், ஜான் ஸார், நேப்பாளம், இமாசலப் பிரதேசம்பற்றி எழுதப்பட்ட தனித் தனிப் புத்தகங்கள். சோவியத் மத்திய ஆசியா, சோவியத் நாடுபற்றிய மிக அதிகமான தகவல்கள்கொண்ட புத்தகங்களும் குறிப்பிடப்படவேண்டியவை.

இலக்கியத் தன்மைபெற்ற இதர படைப்புகளில் வரலாறுபற்றி அவர் எழுதிய நூல்கள் அடங்கும். மத்திய ஆசியாபற்றிய அளவில் பெரிய வரலாறு மத்திய ஆசியா கா இதிகாஸ் என்பது. இதை சாகித்திய அக்காதெமி கௌரவித்துள்ளது. இந்நூல்பற்றி முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ரிக் வேதிக் ஆரியா; அக்பர்; மற்றும் ஃபவுண்டர்ஸ் ஆஃப் பிரிட்டிஷ் ரூல் இன் இண்டியா என்ற புத்தகத்தின் இந்தி மொழிபெயர்ப்பு போன்றவை முற்றிலும் சுயமான படைப்புகளாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவருடைய புரதத்வ நிபந்தாவளி (புராதன வரலாறு மற்றும் தொல்பொருள் ஆய்வு சம்பந்தமான கட்டுரைகள்) மிகவும் முக்கியமான சில ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்டுள்ளது.

இந்தி இலக்கியத்தின் ஆரம்ப வரலாற்றின்மீது ராகுல் புதிய வெளிச்சம் பாய்ச்சினார். சம்ஸ்கிருதம் மற்றும் பாலி கவிதைகளின் இரண்டு தொகுதிகளை தொகுத்ததன் மூலம் (இத் தொகுப்புகள் இன்னும் வெளிவரவேயில்லை) ராகுல், தனது இறுதி நாட்களில், மரபுரீதியான புராணமல்லாத கவிதைகளின் சுருக்கத்தை, தற்கால வாசகரும் படித்து ரசிக்கக்கூடிய வகையில், உருவாக்க முயன்றார். இந்தி காவ்யதாரா (அபப்பிராம்ஸா)வைத் தொகுத்துப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தபோதே அவர் இந்த வேலையையும் மேற்கொண்டார். காவ்யதாரா புராதன இந்திக் கவிதையை சித்தர்கள், நாதர்களின் மறைவான மற்றும் அந்தரங்கமான கவிதைகளோடு இணைக்கும் முயற்சியாகும். சாரகபா(த்), கண்காபா(த்), டோம்பி—பா போன்ற முற்காலக் கவிஞர்களின் படைப்புகள் இதில் அடங்கியுள்ளன. அக்கவிஞர்கள், ஆயிரம் வருடங்களுக்கு முன்பே, கடுமையான சாதி அமைப்பையும் அதன் ஆசார அனுஷ்டான முறைகளையும் துணிச்சலோடு தூக்கியெறிந்தவர்களாவர். கபீர், தாதா, ராய்தாஸ், நாமதேவர் போன்ற பிந்திய நூற்றாண்டுகளைச் சேர்ந்த புரட்சிக்காரர்களும் சம்பிரதாயங்களோடு ஒத்துப்போகாதவர்களுமான இந்திக் கவிஞர்களின் முன்னோடிகள் இவர்கள். அப்துர் ரஹ்மான், புப்பா—தந்த் ஆகியோரின் இயற்கை வர்ணனை, மானிடக் காதல் விவரிப்புகளில், கதா—சப்தஷதியில் ஹலா உயர்வாகக் கொண்டாடிய கவிதை வகையின் சாயைகளைக் காணமுடியும். ராகுல், ஸ்வயம்புவின்

ஜைன ராமாயணம் பற்றிக்கூட ஒரு கட்டுரை எழுதினார். தோகா—கௌபாய்யின் அமைப்புமுறைக்கும் உத்திக்கும் இந்த ராமாயணம் வழிவகுத்தது. இந்த அமைப்பையும் உத்தியையும் ரொம்பப் பிற்காலத்தில் துளசிதாசர் கையாண்டார். தோகா கோஷ் நூலுக்கு ராகுல் எழுதிய முன்னுரை வெகு தீர்க்கமானது.

இந்த ரீதியான ஆராய்ச்சி முறையில், ராகுல் தாகினி கவிதையிலிருந்து, குதுப் முஸ்தாரி முதலிய படைப்புகளிலிருந்து, கவிதைகளைத் தேர்ந்தெடுத்து, தேவநாகரியில் வெளியிட்டார். தாக்கினி காவ்யதாராவில் பாண்டித்தியம் நிறைந்த முன்னுரை ஒன்று எழுதப்பட்டிருக்கிறது. மேலே குறிப்பிடப்பட்டுள்ளதற்கு இணையானதாகும் இது. தென் இந்தியாவில் வசித்த முஸ்லிம் சாதுக்களின் இக்கவிதைப் படைப்புகள், மொழியில் மட்டுமின்றி சிந்தனை உள்ளடக்கத்திலும் எவ்வாறு அநேக இந்தியத் தன்மைகளைப் பெற்றுள்ளன என்பதை ஆய்ந்துகூறும் கட்டுரையாக இம் முன்னுரை அமைந்திருக்கிறது. சூஃபி தத்துவத்தை, தக்காணத்தின் அந்த வட்டாரத்தில் நிலவுகிற மக்கள் கவிதை விஷயங்களோடு இணைத்துக்காட்டும் முயற்சியும் இதில் கலந்துள்ளது. ஆதாரபூர்வமான இலக்கிய மறுசிந்தனையைக்கொண்ட, வரலாற்று ரீதியாக மதிப்புவாய்ந்த இப் படைப்பின் ஒரே ஒரு பாகம் மட்டும்தான் பிரசுரம் பெற்றது. இந்தி இலக்கிய வரலாற்றுக்கு ராகுல் அளித்திருக்கும் பங்குகள் இவை.

ராகுல் சோவியத் ரஷ்யாவிலிருந்து திரும்பிவந்த பின்னர், சத்ருதீன் ஐனியின் எழுத்துக்களை இந்தியில் மொழிபெயர்த்த பிறகு, பேச்சு வழக்கு என்று சொல்லப்படுகிற மொழியின் அடிப்படையில், இந்தி பேசப்படுகிற பிரதேசங்களைக் காட்டும் தேசப் படத்தைப் புதிதாக வரையவேண்டும் என்று பரிந்துரைத்தார். உண்மையில் அவை தனித்தனி மொழிவாரி இனங்களாகும் என்று அவர் எடுத்துக்கூறினார். போஜ்புரி, மைதிலி, பிராஜ், அவதி, பந்தல்கண்டி, மால்வி, ராஜஸ்தானி முதலியவை ஆரம்பக் கல்விக்கு உரிய சாதனமாக உபயோகப்படுத்தப்படவேண்டும் என்று அவர் வலியுறுத்தினார். போஜ்புரியில் அவர் எட்டு சிறு நாடகங்கள்கூட எழுதினார். பாகோ நஹி, துனியா கோ பாத் லோ (பயப்படாதே, உலகத்தை மாற்றி அமை!) போன்ற தனது புத்தகத்தில் அவர் திட்டமிட்டே கடினமான சம்ஸ்கிருத, பாரசீக வார்த்தைகளை விலக்கினார். ஏனென்றால், பலனுடையதாக விளங்கவேண்டுமானால், எழுதப்படுகிற இந்தி மொழி பேசப்படுகிற மொழியோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவேண்டும் என்று அவர் நம்பினார். செயற்கையான இந்துஸ்தானி மொழி உருவாக்குவதை அவர் அலட்சியப்படுத்தினார். அதில் மாபெரும்

இலக்கியங்களைப் படைக்க முடியாது என அவர் கருதினார் (''சுமித்ரானந்தன் பந்த் அல்லது இக்பால் கவிதையை எடுத்துக்கொள்ளுங்கள். அதை எப்படி இந்துஸ்தானியில் எழுத இயலும்?'' என்று அவர் தனது சுயசரிதை—இரண்டாம் பாகத்தில் கேட்கிறார்). மக்கள் மத்தியில் கிசான் தலைவராக அவர் பணியாற்றியதிலிருந்து, மொழி மக்களிடம் எடுத்துச் செல்லப்பட வேண்டும்; அதன் உபயோகத்தின் அடிப்படையில்தான் மொழி வளர்க்கப்படவேண்டுமே தவிர, அகராதிகளின் அடிப்படையில் அல்ல என்ற உறுதி அவருக்கு ஏற்பட்டிருந்தது. செயற்கையான, வழக்கில் இல்லாத சம்ஸ்கிருதச் சொற்களைக் கொண்ட ஒரு அகராதி தயாரித்த டாக்டர் ரகுவீராவின் முயற்சியை அவர் கடுமையாக விமர்சித்தார்.

ஷாஸன் சப்த கோஷ் (வித்யாநிவாஸ் மிச்ராவும் இந்நூலாசிரியரும் சேர்ந்து தயாரித்தது. பிரயாக், இந்தி சாகித்திய சம்மேளனம் 1948-ல் வெளியிட்டது) முன்னுரையில், இந்தி சாகித்திய சம்மேளனத்தின் தலைவர் என்ற முறையில், அவர் வழிகாட்டும் கொள்கையை வகுத்துத் தந்தார். அந்த அகராதியில், இரண்டாவது பத்தி அதுவரை பிரசுரமாகியிருந்த அனைத்து அகராதிகளிலிருந்தும் ஒரு பதத்தின் சகல வடிவங்களையும் (ஒரே அர்த்தம் தருகிற சமமான பதங்கள் பலவற்றையும்) பட்டியலிட்டுக் காட்டியது. டாக்டர் ரகுவீரா தயாரித்த வழக்கத்தில் இல்லாத சொற்களையும் அது கொண்டிருந்தது. ஆயினும், எளிமையான, அதிகம் பேச்சு வழக்கில் உள்ள சொற்களுக்கு முதலிடம் தந்து முதல் பத்தியில் வெளியிட்டுள்ளது. இங்கிலீஷ் டிக்ஷனரியில் 'Academy' என்றிருப்பது இந்தியில் 'Akademy' என்றுள்ளது என்பதுபோல.

நாட்டுப்புறப் பாடல்கள், மக்கள் நாடகம், நாடோடிக் கதைகள் ஆகியவற்றை ராகுல் பெரிதும் விரும்பினார். போஜ்புரி மக்கள் கவியான பிஸ்ராம் பற்றி அவர் ஒரு கட்டுரை எழுதினார். அக்கவிஞர் இளமையிலேயே இறந்துபோனார். அவர் கவிதைகளைத் தொகுத்து, ஒரு தொகுதியாக ராகுல் வெளியிட்டார். பந்தல்கண்டி மக்கள்கவி இசூரியின் கவிதைகள் பற்றியும் அவர் கட்டுரை எழுதினார். அவர் டாக்டர் ராஜேந்திரபிரசாத்துடன் போஜ்புரியிலும், பேராசிரியர் அமர்நாத் ஜாவுடன் மைதிலியிலும் பேசுவது வழக்கம். நைனிடாலில் அவருடைய வெள்ளி ஓக் வீட்டின் அருகாமையில் வசித்த வயோதிக மாது ஒருத்தியிடமிருந்து நாடோடிக் கதைகளையும் நாட்டுப்புறப் பாடல்களையும் அவர் சேகரித்தார். அவற்றை ஆதி இந்தி கி ககானியா அவுர் கீதேன் என்ற புத்தகமாக வெளியிட்டார். மீரட்டிலும் ஆக்ராவிலும் பேசப்படுகிற மொழிதான் தற்கால காரி போலி இந்தியின்

சொந்தத் தாயாகும் என்று அவர் நம்பினர்; அதை காராவி என அவர் குறிப்பிட்டார். இந்த நாட்டுப்புறப் பாடல்களும் நாடோடிக் கதைகளும் ஹர்யான் மற்றும் பிராஜ் தாக்கங்கள் பெற்றிருக்கின்றன; உருதுத் தன்மைகளையும் ஏராளமாகக் கொண்டுள்ளன.

இந்தி தேசிய மொழி ஆகவேண்டும் என்று பரிந்துரைப்பதில் அவர் தீவிரமாக இருந்தார். எனினும் அவர் ஒரு மொழி வெறியர் அல்லர். இந்தியுடன், இந்தியின் வட்டார வழக்குகள் என்று கூறப்படுகிற அனைத்தும் (அவற்றை 'தாய் மொழிகள்' என்று அவர் குறிப்பிட்டார்), அவதி, போஜ்புரி, பிரஜா, ராஜஸ்தானி முதலான பலவும், அவற்றின் மூலமாக ஆரம்பக் கல்வி பயிற்று விக்கப்படுகிற அளவுக்கு அபிவிருத்தி செய்யப்படவேண்டும் என்று அவர் நம்பினர். இப்படி 'தாய் மொழிகள்' பற்றி அவர் பேசியதை, இந்தியை துண்டு துண்டாக்குகிற செய்கை என்றும், சோவியத் செயல்முறையை இந்தியாவில் புகுத்த விரும்புகிற போக்கு என்றும் அவருடைய விமர்சகர்கள் கருதினர்கள். அவரே சென்ற மகாயுத்த காலத்தில் போஜ்புரியில் சில நாடகங்கள் எழுதினர். இதெல்லாம் முப்பது வருடங்களுக்கு முன்பு செய்யப் பட்டது. அப்போது, சாகித்திய அகடமி பின்னர் செய்ததுபோல, மைதிலி, அல்லது ராஜஸ்தானி அல்லது நேப்பாளிக்கு இலக்கிய அந்தஸ்து கொடுப்பது பற்றிய பிரச்சினை எண்ணப்பட்டதுமில்லை, விவாதிக்கப்படவுமில்லை. ஆகவே, சிறுபான்மை மொழி இனங் களைப் பாதுகாப்பது என்ற கொள்கையைப் பரிந்துரைப்பதில் அவர் முன்னேடியாக இருந்தார். ஆனல், துரதிர்ஷ்டவசமாக, 1948-ல் பம்பாயில் நடைபெற்ற இந்தி சாகித்திய சம்மேளன மாநாட்டின்போது அவர் நிகழ்த்திய தலைமை உரையும், உருது மொழிக்கு தேவநாகரி எழுத்தை உபயோகிக்கவேண்டும் என்று அவர் வலிமையாக எடுத்துக் கூறியதும், கடுமையான வாக்கு வாதங்களைக் கிளறிவிட்டன. உருது பேசும் கம்யூனிஸ்டுகள் பலர் சேர்ந்து, ராகுலை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து வெளியேற்றும்படி கவனித்துக்கொண்டார்கள்.

'தாய் மொழிகள்' சார்பில் ராகுல் பேசி வந்தது பலத்த எதிர்ப்பை உண்டாக்கியது. எனினும், ஸ்ரீ பனரசிதாஸ் சதுர்வேதி, டாக்டர் வாசுதேவசரண் அகர்வால், பண்டிட் க்ஷேத்திரேஷ் சந்திர சட்டோபாத்யாய, டாக்டர் உதயநாராயண் திவாரி போன்ற வலிமைமிக்க ஆதரவாளர்களையும் பெற்றுத் தந்தது. யஷ்பால் ஜெய்னின் மதுகர் என்ற சஞ்சிகை இக்கொள்கைக்காகப் பாடுபட்டது. ஆனல் மாநிலங்கள் புனரமைப்புக் கமிஷனின் அறிக்கை வெளியிடப்பட்டது; இந்தி பேசும் மாநிலங்களை மேற்

கொண்டு பிரிப்பதற்கில்லை என்று அது உறுதியாக அறிவித்து விட்டது. சர்தார் கே. எம். பணிக்கரின் மறுப்புக் குரலும் கவனிக்கப்படவில்லை.

இவ்வகையில் ராகுல் மற்றுமொரு முன்னோடி வேலையும் செய்தார். இந்தி இலக்கியத்தின் விஸ்தாரமான வரலாறு பற்றிய பெரிய தொகுதி ஒன்றை அவர் பதிப்பித்தார். அலகாபாத், இந்தி சாகித்திய சம்மேளன் இந்தப் பணிக்கு உதவி புரிந்தது. இந்தியின் கிளை மொழிகளுக்கு (உப பாஷைகள்) மட்டுமே இத் தொகுப்பு அக்கறை காட்டியுள்ளது. 'தாய் மொழிகள்'— போஜ்புரி, மைதிலி, மகாகி, அவதி, பிராஜ், பந்தல்கண்டி, ராஜஸ்தானி, மால்வி, நிமதி, மற்றும் இமாசலப்பிரதேசத்தின் பல்வேறு பகாரி மொழிகள்—ஒவ்வொன்றைப் பற்றியும் தகுந்த நிபுணரும் பண்டிதருமான அறிஞர்கள் புலமை நிறைந்த கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். இந்த ஒரு தொகுப்பிற்காகவே ராகுல் தேசிய கவுரவம் பெறுவதற்குத் தகுதி உடையவராவார். பத்மபூஷண் விருது, அவருடைய வாழ்வின் அந்திம காலத்தில், அவர் அதை உயர்வாக மதிக்க முடியாத நிலையில் இருந்தபோது, அவருக்கு வந்து சேர்ந்தது. அதற்குள் அவருடைய ஞாபக சக்தி மிக மோசமாக பாதிக்கப்பட்டுவிட்டது.

# இலக்கிய சாதனைகள்

ராகுலின் ஆளுமையும் சாதனைகளும் பன்முகமானவை, பல்வேறு தன்மைகள் கொண்டவை. எனவே, அவருடைய அரசியல் எழுத்துக்கள், அல்லது மொழிஇயல் சிந்தனை, அல்லது சமூகத் தீவிரவாதம் (இந்துக்கள் மாட்டிறைச்சி சாப்பிடவேண்டும் என்று அவர் பொதுக்கூட்டத்தில் அறிவித்தார். வைதிக இந்துமத வாதிகள் நிறைந்த கூட்டம் ஒன்றில் அவர்மீது கற்கள் வீசப் பட்டன) போன்ற விவாதத்துக்கு உரிய விஷயங்களில் இறங்காமல் இந்தி இலக்கியத்துக்கு அவர் செய்துள்ள சாதனைகளை மட்டும் நமது கவனத்துக்கு உரியதாகக் கொள்வதே நல்லது. இந்த அத்தி யாயத்தில், அவருடைய எழுத்துக்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டி, அவரது எழுத்துக்களின் நடை, மற்றும் சிந்தனை ஓட்டம் ஆகியவற்றின்மீது ஒரு நோட்டம் செலுத்தும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது.

அவருடைய சிந்தனையிலும் வாழ்க்கை முறையிலும், ஒவ் வொரு திசையிலும் இழுக்கிற இரண்டு நேர்மாறான போக்குகளின் கலவையும் சமன்பாடும் இருந்தது. அவர் மரபுரீதியான பிராமணீய மனப்பண்பு பெற்றிருந்தார்; அதற்கு எதிராக அவர் புத்த சமயத் திடம் ஆழ்ந்த பற்றுதலும் கொண்டிருந்தார். அவரது வைதீகம் மற்றும் பல கடவுள் வழிபாட்டுக் கொள்கைக்கு மாறாக ஆரிய சமாஜத்தின்மீது கொண்ட ஆர்வமும், விக்கிரக ஆராதனை எதிர்ப்பும், வேதங்கள் காட்டும் சான்றுகளின் முடிவில் நம்பிக்கை யும் அமைந்திருந்தன. பின்னர் அதை அவர் விலக்கித்தள்ளினார். காவிய சம்ஸ்கிருதத்தையும் அரபு மொழியையும் அவர் பண்டிதர் களிடமும் மௌல்விகளிடமும் கற்றார்; பாலி மொழியை இந்தியா, இலங்கை, நேபாளம், திபெத்தில் வசித்த புத்த சந்நியாசிகளிடம் கற்றறிந்தார்; எனினும், அந்தப் புராதன இலக்கணவாதிகள் மற்றும் சூத்திரக்காரர்களின் வார்ப்புகளில் தன் மனம் ஒடுங்கிப் போகாதபடி அவர் அதன் சுயேச்சைப் பண்பைக் காப்பாற்றி வந்தார். மாறாக, எழுதப் படிக்கத் தெரியாத சாதாரண மக்களும் விவசாயிகளும் தொழிலாளர்களும் பேசிய 'சிதைந்த மொழிகளை' அவர் தீவிரமாக ஆதரித்தார். அவர் பிரக்ஞைபூர்வமாகத் தனது

வர்க்கத்தைத் தானே குறைத்துக்கொண்டார். தீவிரத் தனிநபர் வாதியான அவர் மிகச் சின்னவயதிலேயே குடும்ப பந்தங்கள் அனைத்தையும் தகர்த்தெறிந்தார்; 'பாட்டாளிவர்க்கத்தின் சர்வாதிகாரம்' என்ற புதிய சித்தாந்தத்தின் பிரசாரகராகவும் குரலாகவும் மாறினார். ரஷ்யாவின் சோல்காஜ் (கூட்டுப் பண்ணை) களையும், சீனாவின் 'கம்யூன்'களையும் பார்த்ததும் அவர் ஆனந்த பரவசத்தோடு பேசுவதில் ஈடுபடுகிறார். மடங்கள், ஆசிரமங்கள், சாதுக்களின் அந்தரங்க ரகசிய அமைப்புகள், லாமாக்களின் ஏகபோக—தெய்வ ஆதிபத்தியம் ஆகியவற்றை அவர் கடுமையாக விமர்சித்தார். அவர் சம்பிரதாய ரீதியில் ஒரு மதவாதி அல்ல; எனினும் நம்பிக்கையின் ஆழமான உள்ளோட்டம் ஒன்று அவருள் இயங்கியது; இந்தியக் கலாசார மதிப்புகளை அவர் நேசித்தார். இந்தியா முழுமைக்கும் பொதுவான ஒருரக மொழி ஒருமைப் பாட்டை அவர் ஆதரித்தார்; ஆனாலும், 1948-ல், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி அந்நாளையில் அதிகாரபூர்வமாகக் கடைப்பிடித்த மொழிக் கொள்கையிலிருந்து அவர் அந்நியமாகிவிட்டார். ஸஜ்ஜத் ஜாகீரும் டாக்டர் ராம்பிலாஸ் சர்மாவும் ஒரு பக்கத்திலும், ராகுலும் அவருடைய ஆதரவாளர்களும் மறுபுறத்திலுமாக எடுத்த நிலைகளின் தன்மைகள் தவறுகளை நாம் இங்கே சர்ச்சிக்க வில்லை. ராகுலின் அமைதியற்ற ஆத்மாவில் இயங்கிய இந்த நித்தியமான இழுபறிப் போராட்டம், இந்தி மொழியில் அவரு டைய எழுத்துக்களுக்கு ஒரு அதிவிசேஷத் தன்மையைச் சேர்த்தது என்பதே இங்கே குறிக்கப்படுகிறது.

அவர் தனது நாட்குறிப்புகளில் அதிகமான தன்முனைப்பும் விசாரணை இயல்பும் காட்டியுள்ளார்; தன் சுயவரலாற்றை எழுதுவ தற்குப் பெரிதும் அக்குறிப்புகளையே துணைகொண்டார். இந்த ரக எழுத்தின்மூலம் ஒரு இரட்டை நோக்கை நாம் கண்டுணரலாம்: ரசித்து மகிழும் ராகுல் வேறு; பார்வையாளர் ராகுல் வேறு. முறையான படிப்பில் ஏற்பட்ட இடைவெளியை, ஒரு நபருக்கு எவ்வளவு சாத்தியமோ அவ்வளவுக்கு, மிக அதிகமான அளவிலும் வெகு பலவகைப்பட்ட தன்மையிலும், மனித விசாரிப்பின் அனைத்துப் பிரிவுகளிலிருந்தும் அறிவையும் தகவல்களையும் சேகரிப் பதன்மூலம் அவர் ஈடுகட்ட விரும்புகிறார். தனது அறிவுப் பெருக் கத்தைக் கொண்டாடுகிறபோதே, அவர் தன்னை மறந்து இமாலய மலைஓரத்தில் காணப்படும் மகத்தான இயற்கை அழகைக் கண்டு மகிழவும் அதை வர்ணிக்கவும் நின்றுவிடுகிறார்; அல்லது சுரண்டப் படுகிற கிராம மகளிரின் பரிதாப நிலைக்கு இரங்குவதில் தனது அடக்கிவைக்கப்பட்ட உணர்ச்சிகளைத் திறந்துகொட்டுகிறார்; அல்லது 'மாண்புமிகு' பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுகிற வர்களின் சிறுமைகள் குறித்து நயமான நகைச்சுவைக் குறிப்புகள்

தருகிறார். எனவே அவரது நடை ஒரே சீராக இருப்பதில்லை. ஆனால் மொழி அலங்காரக் குறைபாடுகள் பற்றி வாசகன் கவலைப் படுவதேயில்லை; ஏனெனில், ஏதாவது ஆச்சர்யமான, அதிர்ச்சி தருகிற, புதுமையாய் வெளிப்படுத்துகிற விஷயம் ஓயாது அவன் முன் தென்பட்டவாறு இருக்கிறது—அவனுக்கு அதற்குமுன் ஒரு போதும் எதிர்பட்டிராத ஒரு கருத்து அல்லது விவரிப்பாகும் அது. சாதாரண வாசகர்களின் கற்பனை சதா கிண்டிவிடப்பட்டவாறு இருக்கிறது; ராகுல் அவர் பாட்டுக்கு பக்கம் பக்கமாகத் தகவல் களை எழுதிக்கொண்டே போகிறார். அவை எல்லாம் வேறு இடங் களில் படிப்பதற்கு அலுப்புத்தரும் விஷயமாகவே அமையக்கூடும். இங்கோ வாசகன் ராகுலுடன் சேர்ந்து, கலாசார பூர்வகுடிஇயல், தொல்பொருள் இயல், சமுதாய இயல், தேவ இயல், மொழி இயல் மற்றும் இலக்கியக் கண்டுபிடிப்புகளின் புதிய படிமானங்களை ஆராய்ந்தவாறு செல்கிறான். அறிமுகமாகியிராத நிலப்பகுதிக்கும் பெரும் பரப்புக்கும் போகிற இந்தப் பெரிய முடிவற்ற பயணத்தில், இந்த அறிவுத் தேடலில், மனித முயற்சியின் மாபெரும் வெளிப் பாட்டைப் பார்வையிடுவதில் வாசகனும் ஒரு கூட்டாளி ஆகி விடுகிற மகிழ்ச்சியை அடைகிறான். பெருமையின் அல்லது சோகத் தின் உணர்வு அவனை ஒருபோதும் தாக்குவதில்லை; ஏனெனில், சாதாரண அனுபவங்களில்கூட அதிவிசேஷத் தன்மையைக் காண் கிற ராகுலின் உற்சாகம் வாசகனையும் தொற்றிக்கொள்கிறது; பிடித்தாட்டுகிறது.

கவிஞர் கீட்ஸின் சுற்றியலையும் இயல்பை ராகுல் ஒரு தத்துவ மாகவே ஆக்கிக்கொண்டார்—

எப்போதும் எண்ணத்தைச் சுற்றித் திரியவிடு

ஆனந்தம் ஒருபோதும் வீட்டில் கிட்டாது.

ஆனால், அவர் தனது கூம்கார் சாஸ்திரம் (ஊர் சுற்றும் அறிவியல்) என்ற நூலில், கற்பனாலங்கார நழுவுதல் கொள்கை யைப் பரிந்துரைக்கவில்லை; பற்றுதல் இல்லா வாழ்வுக்கு ஏற்ற திட்டவட்டமான ஒரு செயல் குறிப்பையும், அதே சமயம் வாழ்க்கை என்கிற இந்தத் திறந்த புத்தகத்தின் ஒவ்வொரு எழுத்தையும் படிப்பதற்கான வழிவகைகளையும் நுட்பமாகத் தீட்டியிருக்கிறார். ஒரு சந்நியாசியாக அவர் பெற்ற ஆரம்பகாலப் பயிற்சி, அவரது பிந்திய ஆரிய சமாஜப் பின்னணி, அதற்கும் பிற் பட்ட கிசான் சபை அரசியலில் அவர் தீவிரமாகக் கலந்துகொண்ட அனுபவம், திபெத்திலும், சோவியத் ரஷ்யாவிலும் தங்கியிருந்தது (இவை இரண்டும் முற்றிலும் நேர்மாறான இடங்கள்) இவை எல்லாம் சேர்ந்து ஒரு இலட்சிய 'ஊர்சுற்றி' (கூம்கார்) ஆவதற்கு அவரை தகுதிப்படுத்தின.

ஆகவே, அவர் விரும்பிய மனிதர்களைப்பற்றிக் குறிப்பிடுகையில் அவர் வியந்து பாராட்டி அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகளை உயர்வாக எழுதியபோது, அவர்களது ஊர்சுற்றும் பண்பைச் சேர்த்தெழுதுவதில் ஆர்வம் காட்டினார். கூம்கார் ராஜ் நரேந்திர யாஷ், கூம்கார் பட் திவாகர், மகா பர்யாதக் இந்துப் பர்யாதக் நைன் சிங், பாக்கர் பாபா போன்ற அடைமொழிகள் அநேக இடங்களில் காணப்படுகின்றன. பயணிகள், சுவாமிகள், சாதுக்கள், பிக்குகள், பதந்துகள், மகந்துகள், பிரமச்சாரிகள், பரிவ்ராஜக்குகள், பாபாக்கள் முதலியவர்களை அவர் நேசித்தார். அதித் ஸே வர்த்தமான், ஜின்கா மேன் கிரித்தஞ்ஞனு என்ற இரண்டு தொகுதிகளில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன. ராகுலின் நண்பர்கள் சாதுக்கள் மாத்திரம் அல்ல; பண்டிதர்களும், பல்வேறு மத நம்பிக்கையினரும்—இந்து, முஸ்லிம், பௌத்தர், ஜைனர், கிறிஸ்துவர், சீக்கியர், நாத்திகர்கள்கூட—அவருடைய நண்பர்களாக இருந்தனர். இப்புத்தகங்களிலிருந்து தரப்பட்டுள்ள நான்கு மேற்கோள்கள் அவருடைய மனசின் விசாலத் தன்மையை எடுத்துக்காட்டும்:

## ஆச்சார்ய நரேந்திரதேவ்

''நரேந்திரதேவ் தனது வாழ்வின் இறுதிவரை ஒரு பகுத்தறிவு வாதியாகவே இருந்தார். முதிய வயது அவரை மாற்றிவிடவில்லை; மற்றவர்கள் பொதுவாக வயது ஆக ஆக வேறு ஆட்களாக மாறிப்போகிறார்கள். 'மத'வாதிகள் பற்றி அவர் கேலி பேசுவது வழக்கம். அவர் வேடிக்கையாக 'சோன்ச் பந்த்' (பறவைமூக்கு மதம்) ஒன்றை ஆரம்பித்தார். தாங்களாகவே அமைத்துக் கொண்ட இந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் சந்திக்கும்போது, வலது உள்ளங்கையை ஒரு பறவைமூக்கு மாதிரி முன்னே நீட்டி வணக்கம் தெரிவித்துக்கொள்வார்கள். அவர் நல்ல படிப்பாளி, தீவிர சிந்தனையாளர், அறிவுக்கூர்மையும் நகைச்சுவை உணர்வும் நிரம்பப் பெற்றவர், ஒரு இலட்சியவாதி. அவர் சோஷலிசத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டவர். மார்க்ஸ் அவரை போதுமான அளவு பாதித்திருந்தார். நான் கம்யூனிசத்தால் ஈர்க்கப்பட்டிருந்தேன். சோஷலிஸ்ட் கட்சிக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்குமிடையே நல்ல உறவுகள் கிடையாது. என்றாலும்கூட எங்கள் சொந்த உறவுகள் எப்போதும் சுமுகமாகவும் மாறுபடாமலும் இருந்தன. நாங்கள் இணைந்து கம்யூனிஸ்ட் மேனிபெஸ்டோவை மொழிபெயர்த்தோம். அப்போது, உப்பு சத்தியாக்கிரக சமயத்தில், நான் காசி வித்தியாபீடத்தில் இருந்தேன். அது பிரேம் சந்தின் அச்சகத்தில் அச்சிடப்பட்டது. . .'' (ஜின்கா மேன் கிரீத்தஞ்ஞனு, பக்கங்கள் 183–184).

### தோழர் மகமது ஐப்பார்

''முதல் பார்வையில், மகமதுவின் நன்கமைந்த உடல்கட்டும் தன்மையும் அவரைப் பார்க்கிற எவருக்கும் எடுப்பான ஒரு பட்டாணியன் நினைப்பையே ஏற்படுத்தும். ஆனால் அவரது சுத்த மாக சவரம் செய்யப்பட்ட முகத்தில் தோன்றும் இனிய புன்முறுவல் வேறுவித மனப்பதிவை உண்டாக்கும். நான் அவரை முதன் முறையாக தேவ்லி முகாம் சிறையில் கண்டேன். அவர் மிகக் கொஞ்சமாகவே பேசினார். அவர் பேனா வலிமை வாய்ந்தது; ஆனால் அதை அவர் பெரும் கட்டுப்பாட்டுடன் உபயோகித் தார்... தேவ்லி முகாமில், அரிதாகக் கிடைக்கக்கூடியனவும் நூலகங்களில் கிடைக்காதனவுமான அநேக நூல்கள் எனக்குத் தேவைப்பட்டன. மகமது அவற்றைப் படித்திருந்தார். அவை எனக்குக் கிடைக்கும்படி செய்வதற்கு அவர் ஏற்பாடு பண்ணினார். அவர் மிகப் பிரியமாகவும் மனவிசாலம் கொண்டவராகவும் இருந்தார். பொதுவாக ஒரு கம்யூனிஸ்ட் வறண்ட, கடுமையான மனிதராகத்தான் உருவகிக்கப்படுகிறார். ஆனால் மகமது வித்தி யாசமான ரகம்; கருணையும் கவர்ச்சியும் உடையவர். தன்னைப் பற்றிப் பெருமையாக நினைத்துக்கொள்ளாத பெரிய மனிதர். அவர் நெடுங்காலம் பண்டிட் நேருவுக்கு அந்தரங்கக் காரியதரிசி யாக இருந்தார். அவர் தனது இலட்சியங்கள் தவிர வேறு எந்தப் பதவியையும் பெரிதாக மதித்ததில்லை'' (ஜின்கா மேன் கிரித் தஞ்ஞா, பக்கங்கள் 237—238).

### கல்வியாளர் பாரனிகோவ்

''அலெக்சி பீட்ரோவிச் பாரனிகோவ் இந்தியருக்கு அவ்வள வாக நன்கு அறிமுகமானவர் அல்லர். அவர் அதிகமாக அறியப் பட்டிருக்கவேண்டும். லல்லுலால்ஜீயின் பிரேம்சாகர், துளசிதாசின் இராமசரிதமானஸ் ஆகியவற்றை அவர் மொழிபெயர்த்தார். துளசி இராமாயணம் மொழிபெயர்ப்பில் அவர் தனது புலமையை மட்டு மல்லாது தன் ஆழ்ந்த பக்தியையும் புலப்படுத்தினார். கவிதை வடிவத்தையும் வரிகளையும் மூல அவதியில் உள்ளபடியே ரஷ்ய மொழியில் அமைக்க அவர் முயன்றார். இந்த நூல் ரஷ்யாவில் பிரசுரிக்கப்பட்ட சமயம், நான் லெனின்கிராடில் இருந்தேன். அவர் அநேக விஷயங்களில், சித்திரங்களைத் தேர்வு செய்வதிலும் கூட, என்னைக் கலந்தாலோசித்தார். அந்நாட்களில் இந்தியாவுக் கும் சோவியத் ரஷ்யாவுக்குமிடையே அரசுத் தூதுவர் தொடர்பு கள் இருந்ததில்லை. இக்காவியத்தின், சித்திரங்களோடு கூடிய இரண்டு பழைய பதிப்புகள்பற்றி அவர் என் மூலமாக அறிந்ததும், அவற்றை அடைய முயன்றார். காசியில் இருந்த நகரி பிரசாரிணி

சபை அவருக்கு உதவியது . . . அவர் பெரிய மொழிஇயல் அறிஞர். திசிகான் (நாடோடிகள்) இனத்தினர் ரோம்னி—டோம்னி மொழி பேசினர்கள் என்றும், அவர்கள் இந்தியாவி லிருந்து வந்தவர்கள் என்றும் அவர் என்னிடம் கூறினர்'' (அதித் ஸே வர்த்தமான், பக்கங்கள் 98—102).

## நேப்பாளிக் கவிஞர் தேவகோடா

''1933 ஜனவரியில் நான் நேப்பாளத்துக்கு ஐந்தாவது முறை யாகப் போனேன். அங்கே 'அயல் நாட்டு விருந்தாளி' என நான் அறிமுகம் செய்யப்பட்டேன். எனக்கு நேப்பாளம் அயல்நாடு அல்ல. ஒரு எழுத்தாளனுக்கு, எந்த நாடும் அப்படிப்பட்டது இல்லை. இயற்கையையும் அன்பையும் பாடிய பெரும் நேப்பாளிக் கவிஞரான தேவகோடாவை தந்த அதே இமாலயம்தான் நமது சுமித்ரானந்தன் பந்தையும் தந்துள்ளது. தேவகோடா தான் பிரசாத், பந்த், 'நிராலா'—நேப்பாளி இலக்கியத்திற்கு மூவரும் கலந்த ஒருவர் அவர். 'நிராலா'வின் இதர சில தன்மைகளை, அந்த அளவுக்கு இல்லை என்ருலும், அவர் பகிர்ந்துகொண்டிருக் கிருர் . . . மேதைமைக்கும் பைத்தியத்திற்கும் இடையே உள்ள எல்லைக்கோடு மிக நுண்ணியது. அவர் தனது நாற்பத்து நான்கு வயதுக்குள், நேப்பாளியிலும் ஆங்கிலத்திலும் எண்பத்தெட்டுப் புத்தகங்கள் எழுதினர்; ஆனல் அவற்றில் இருபத்தாறை கிழித்தும் தொலைத்தும் விட்டார். 1934-ல் அவர் தனது முதல் கவிதையான 'கரீப்'ஐ எழுதினர். அதே வருடத்தில் மூனு—மதன் என்ற மக்கள் கதையைப் பாட்டாகவும் எழுதினர். சுற்றுப்புற இயற்கை வர்ணனையும், கதாநாயகன் சிரமப்பட்டு திபெத்துக்குப் பயணம் போனதையும் வெகு கவர்ச்சிகரமாக அதில் அவர் சித்திரித்திருக்கிருர் . . . அவர் கவிதைகள், கதைகள், கட்டுரை கள் எழுதினர். தனது மொழியில் அவர் ஒரு மந்திரவாதியாக விளங்கினர். பல புதிய வார்த்தைகளைப் படைத்து அவர் தன் மொழிக்கு வளம் சேர்த்துள்ளார்'' (அதித் ஸே வர்த்தமான், பக்கங்கள் 105—118).

ராகுலின் எண்ணற்ற இலக்கியக் கட்டுரைகள் புத்தகங்களி லும் சஞ்சிகைகளிலும் சிதறிக்கிடக்கின்றன. ஒரு தொகுதி ராகுல் நிபந்தாவளி (சாகித்திய) என்ற பெயரில் 1970 செப்டம்பரில் பிர சுரிக்கப்பட்டது. 'நான் எப்படி கதாசிரியன் ஆனேன்?', 'பிரேம் சந்த்—நினைவாஞ்சலி', 'பாரதேந்துவும் புஷ்கினும்', 'நாட்டுப் புறப் பாடல்களும் ரேடியோவும்', 'வரலாற்று நாவல்கள்', 'மார் வாரி, பகாரி மொழிகளுக்கிடையே உள்ள உறவு', 'சௌராசி சித்தா', 'சுயம்பு', 'ஆச்சார்ய ரகுவீரா படைத்தளித்த தொழில்

இயல் சொற்கள்' போன்ற கட்டுரைகள் அதில் இருக்கின்றன. தான் ஒரு பிரயாணியாகவும் போதகராகவும் வாழவே ஆசைப் பட்டதாக அவர் முதலாவது கட்டுரையில் கூறியிருக்கிறார். ''எனது பயணக் கதைகளை சொல்லவும், அவற்றைத் திருத்தி அமைக்கவும் முயன்றதில் நான் கட்டுரைகள் எழுதத் தொடங்கி னேன். முதல் கட்டுரை 1915-ல் வெளிவந்திருக்கலாம். முதலா வது ஒத்துழையாமை இயக்கத்தில், 1921-ல் நான் சாப்ரா சிறை யில் இருந்தேன். ஒரு புதிய சமுதாயம் பற்றிக் கனவு கண்டேன். அதைப்பற்றி சம்ஸ்கிருதத்தில் செய்யுள்கள் எழுதினேன். ஐந்து காண்டங்கள் இயற்றினேன். ஆனால் அச்செய்யுள்கள் அனைத்தும் பயனற்றவை என உணர்ந்து, அதை பய்சாவின் ஸாதி என்ற தலைப்பில் இந்தியில் திரும்ப எழுதினேன். ஆங்கிலத்திலிருந்து நான்கு நாவல்களைத் தழுவி இந்தியில் எழுதினேன்; இந்தியத் தன்மைக்கு ஏற்றவாறு அவற்றை நான் மாற்றி அமைத்தேன் . . . 1935–ல் அடக்கி ஒடுக்கப்பட்ட ஏழை எளியவர்களின் உண்மை யான வாழ்க்கைக் கதைகளைப் பதிவு செய்யவேண்டும் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. ஸதாமி கே பச்சே அந்த வகையில் எழுதப்பட்டது ஆகும். 1938-ல் ஜீனே கே லியே என்ற எனது முதல் நாவலை எழுதினேன். 1941 அல்லது 42-ல் பகவத்சரண் உபாத்யாயா எழுதிய வரலாற்றுக் கதைகள் சிலவற்றைப் பார்த் தேன். அவர் தனது பணியைப் பூர்த்தி செய்திருந்தால், நான் வால்கா ஸே கங்காவை எழுதியிருக்கமாட்டேன் . . . ஆனால் ஹஜாரிபாக் சிறையில் வால்கா ஸே கங்காவின் இருபது கதை களையும் நான் எழுதி முடித்தேன் . . . சீர்தூக்கிப் பார்த்து, எது எனது சிறந்த கதை என்று சொல்வது எனக்குச் சிரமமாக இருக் கிறது. ஆனால், அந்தத் தொகுதியில் 'பிரபா' தான் மிகச் சிறந்தது என்று அநேக விமர்சகர்கள் குறிப்பிடுகிறார்கள். ஆயினும், அதே தொகுதியில் உள்ள 'நாகதத்தா' வையும் 'சுரய்யா' வையும் நல்ல கதைகளாகவே நான் கருதுகிறேன்'' (ராகுல் நிபந்தாவளி, பக்கங்கள் 3–5).

வால்கா ஸே கங்கா ராகுலின் மகத்தான கற்பனைப் படைப்பு ஆகும். இந்தி முற்போக்கு இலக்கியத்தில் அது ஒரு மைல் கல் என்று அநேக வருடங்களாகப் பேசப்படுகிறது. இந்திய வரலாற்றின் உண்மைகளைத் தன்னிச்சையாகத் திருத்தி மாற்றி எழுதியிருப்பதை மறைபொருள்வாத மற்றும் புதுப்பிக்கும் போக்கு களைச் சேர்ந்த விமர்சகர்கள் எதிர்த்திருக்கிறார்கள். வரலாற்று மற்றும் இயங்கு இயல் பொருள் முதல் வாதத்தை ஆதாரமாகக் கொண்டு மறுவிளக்கம் செய்யப்பட்டுள்ள சித்திரம் என்று மார்க் சீயவாதிகள் அதைக் கூறுகிறார்கள். இந்தப் படைப்பைப்பற்றிய ஒரு விளக்கமான விவரிப்பை இங்கு தருவது பொருத்தமாக இருக்

கும். உண்மையில், அது கற்பனை வடிவத்தில் எழுதப்பட்ட ஒரு வரலாற்றுப் படைப்பேயாகும். முதல் பதிப்பின் முன்னுரையில், 23—6—42-ல், அவர் இப்படி எழுதினார்:

'மனிதன் தமது ஆதிகால ஆரம்ப நிலையிலிருந்து இன்றைய இந்த நிலைமையை அடைந்திருக்கிறான். கடுமையான போராட்டங்களை அவன் கடக்கவேண்டியிருந்தது. மனித சமூக முன்னேற்றத்தின் சிந்தனாரீதியான தன்மையை நான் மானவ சமாஜ் என்ற நூலில் விவரித்தேன். அதை இன்னும் எளியமுறையில் எடுத்துச் சொல்லலாம். எனவேதான் இந்தப் புத்தகத்தை எழுதும் உந்துதல் எனக்கு ஏற்பட்டது. இந்த வளர்ச்சியை சுலபமாகப் புரிந்துகொள்வதற்காக இதை எழுதினேன். இந்திய வாசகர்கள் இவ்வளர்ச்சியை எளிதில் புரிந்து கொள்வார்கள் என்பதற்காக, இந்தோ-ஐரோப்பிய இனத்தவரை ஒரு உதாரணமாக நான் எடுத்துக்கொண்டேன். நான் எடுத்துக்கொண்டுள்ள இனத்தைவிட, எகிப்திய, அசிரிய, சிந்துசமவெளி நாகரிகங்கள் பல லட்சக்கணக்கான வருடங்கள் மிகவும் முற்பட்டவையாகும். அவற்றை எடுத்துக்கொண்டால், எழுத்தாளன், வாசகன், இரு சாராருக்குமே சிரமங்கள் அதிகரிக்கும்.

'ஒவ்வொரு காலகட்டத்திலும் இருந்திருக்கக்கூடிய இந்திய சமுதாயத்தின் சரியான சித்திரத்தைத் தருவதற்கு நான் முயன்றிருக்கிறேன். ஆனால், இந்தவித முதல் முயற்சிகளில் தவறுகள் ஏற்படுவதற்கான சாத்தியங்கள் எப்போதும் உண்டு. இதைவிடச் சரியான, திட்டவட்டமான சித்திரிப்பை வருங்கால எழுத்தாளர்கள் தருவதற்கு நான் உதவியாக இருப்பேனானால், அதை எனது பெறும்பேறு ஆகவும் சாதனையாகவும் மதிப்பேன்.

'பந்துல் மால் (புத்தர்) காலம்பற்றி, சிம்க சேநாபதி என்றொரு தனி நாவலை நான் எழுதியிருக்கிறேன்.'

இந்திய வரலாற்றின் 8000 வருடங்களை, அதன் புராதன ஆரம்ப கட்டம் முதல் 1942 வரை, இந்தப் படைப்பு தனது பின்னணியாகக் கொண்டிருக்கிறது. 'நிஷா', 'திவா', 'அமிரித்ஸ்வா', 'புருகத்' என்ற முதல் நான்கு கதைகளும் வரலாற்றுத் தன்மையை (கி. மு. 6000 முதல் கி. பி. 2600 வரை) சித்திரிக்கின்றன. 'இக்கதைகளை உருவாக்குவதில் கற்பனை வேலை செய்திருந்தபோதிலும், இவை வெறும் கற்பனைக் கதைகள் இல்லை. இந்தோ-ஐரோப்பிய மற்றும் இந்தோ-ஈரானிய மொழிஇயல், வரலாற்று ரீதியான பாஷா ஞானம் ஆகியவற்றில் ராகுல் செய்த ஆழ்ந்த ஆய்வுகளின் விளைவு இக்கதைகளில் குறிப்பிடத்தகுந்த அம்சமாக இருக்கிறது' என்று பதந்த் ஆனந்த கௌசல்யாயன் அவற்றைப் பாராட்டி எழுதினார்.

காட்டுவாசியாக இயற்கை நிலையில் வசித்த ஆதி மனிதனில் தொடங்கி, விவசாயம் மற்றும் மிருக வளர்ப்பு நிலைகள் மூலம் மனிதன் பெற்ற சமூக பொருளாதார வளர்ச்சியை ராகுல் வரைந்து காட்டுகிறார். நிலப்பிரபுத்துவமும் மானிய முறையும் தொடர்கின்றன. தந்தை வழிச் சமுதாயம் நிலை பெற்றதும், அடிமை அமைப்புமுறை அங்கீகாரம் பெற்றது. வைதீகமும் சடங்குகள் ரீதியான மதமும் படிப்படியான இந்த வளர்ச்சிக்குத் துணைபுரிந்தன. வேதங்கள், பிரமாணங்கள், மகாபாரதம், புராணங்கள், மற்றும் பௌத்த சமய அத்த கதா முதலியவற்றிலிருந்து எடுத்த உதாரணங்களை ஆதாரமாகக்கொண்டு, வரலாற்றைப் பொருள் முதல்வாத அடிப்படையில் விளக்கியிருப்பதுதான் ராகுல் செய்திருக்கும் சுயமான இணைப்பு ஆகும். 'சுதாஸ்' கதை ரிக் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. 'பந்துல் மால்' புத்தமதக் கதையை ஆதாரமாக உடையது. 'நாகதத்தா' சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம், காசிபிரசாத் ஜெய்ஸ்வாலின் ஹிந்து பாலிட்டியையும், 'பிரபா' அஷ்வ கோஷரின் புத்த சரிதா, சௌந்தரானந்தா ஆகியவற்றையும் அடிப்படையாகக் கொண்டவை. ரைஸ் டேவிட் எழுதிய புத்த சமய இந்தியாவும் அதன் வரலாற்றுத் தன்மைக்கு உறுதியளிக்கிறது. 'சுபர்ணு-யவ்தேயா' காளிதாசன் கவிதைகளையும், 'துர்முகி' பாணரின் ஹர்ஷ சரிதா மற்றும் காதம்பரியையும், 'சக்ரபாணி' நைஷாத்தையும் ஆதாரமாகக் கொண்டுள்ளன. இருபது கதைகளில் பதினான்கு சம்ஸ்கிருதம், பாலி மொழி நூல்களின் அடிப்படையில் அமைந்தவை.

கடைசி ஆறு கதைகள் மத்தியகால, தற்கால இந்திய வரலாறுபற்றிக் கூறுகின்றன. 'பாபா நூருதீன்' அலாவுதின் கில்ஜியின் ஆட்சியைப் பின்னணியாக உடையது. 'சுரய்யா'வில் அக்பரின் தாராளக் கொள்கைகள் அடிப்படையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. 'ரேகா பகத்'தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொடுமைகள் தெளிவாக விவரிக்கப்படுகின்றன. 'மங்கள் சிங்' (1857), 'சப்தார்' (1922), 'சுமர்' (1942), ராகுலும் அவருக்கு முந்திய தலைமுறையினரும் கண்டும் கேட்டுமிருந்த கடுமையான சமூக, பொருளாதார, அரசியல் யதார்த்தங்களின் அடிப்படையில் எழுதப்பட்டவையாகும்.

உண்மைகளைத் திரித்துக் கூறுதல், காலவழுக்கள், 'திணிக்கப்பட்ட' வரலாறுகள் முதலியவற்றுக்காகப் பண்டிதர்கள் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். ஆனால் இவைகூட வியாக்யானம் செய்வது, ஒரு சார்பாக எண்ணுவது சம்பந்தப்பட்ட விவகாரம்தான். ஒரு சில உதாரணங்களை இங்கே குறிப்பிடலாம். (1) 'புருதன்', 'அங்கீரா' கதைகளில் அசுர இனம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

சிந்து நதிக்கரைகளில் வசித்த அசிரியர்கள், திராவிடர்கள் ஆகியோரை இணைத்து அது உருவாக்கப்பட்டுள்ளது என்று டாக்டர் பகவத்சரண் உபாத்யாயா கூறுகிறார். (2) வால்மீகி இராமாயணம் இயற்றப்பட்ட காலம் சுங்க ராஜவம்சத்தினரின் காலத்தோடு ஒட்டியதாக இருக்கலாம் என்று ராகுல் ஊகித்திருக்கிறார். இதைக் குறித்து டாக்டர் ராம்பிலாஸ் சர்மா பரிகாசமாக இவ்விதம் எழுதியிருக்கிறார்—''என்ன புதுமையான சமுதாய இயல்! இராமன் சுங்க சக்கிர வர்த்தியின் பிம்பமாகிறான். காளிதாசனின் குமார சம்பவத்தில் வருகிற குமாரன் குமாரகுப்தன் எனும் சுங்க மாமன்னனின் பிம்பம். தசரதர், கௌசல்யா, சீதை, இராவணன் ஆகியோரின் முன்மாதிரிகள் யார் யார் என்பதை ராகுல் இனி நமக்குச் சொல்லவேண்டும்!'' டாக்டர் ராம்பிலாஸ் சர்மா, அவரது தீவிர உற்சாகத்தில், ராகுலை மட்டுமின்றி, ஹஸாரி பிரசாத் துவிவேதியையும் 'பிராமண' இனப்பற்று உடையவர்கள் என்றும் புதுப்பிப்பாளர்கள் என்றும் சாடியிருக்கிறார்! (3) 'சுபர்ண யவ்தேயா' கதையில் ஹூணர்களைத் தோற்கடித்த சக்கிரவர்த்தியின் பெயர் சமுத்திரகுப்தன் என்றிருக்கிறது. உண்மையில், அவன் ஸ்கந்தகுப்தன் ஆவான். (4) 'துர்முகி'யில் ஹர்ஷவர்த்தனனின்சகோதரன் ராஜ்யவர்த்தனன் கன்யாகுப்ஜாதிபதியாகக் காட்டப்பட்டுள்ளது. உண்மையில், அவன் ஸ்தானேஸ்வரை (தற்கால தானேஸர்) ஆண்டவன். ஹர்ஷன் க்ஷத்திரிய சதவாகன வம்சத்தைச் சேர்ந்தவன் என்று கூறப்பட்டுள்ளது. ஆனால், சதவாகனர்கள் பிராமணர்களாவர்; அவர்கள் ஹர்ஷனின் முன்னோர்கள் அல்லர். (5) ஜெய்சந்த், கதையில் சித்திரித்திருக்கிற முறையில், அவனது மூல புருஷனுக்கு நியாயம் செய்கிறவனாக இல்லை. அவனை ஒரு வீர புருஷனாக முஸ்லிம் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். ஆனால், ராகுலின் ஜெய்சந்த் சுகபோகங்களை விரும்பும் காமதூர்த்தக் கிழவனாகக் காணப்படுகிறான். (6) 'சுரய்யா' கதையில், கதாநாயகி அபுல் ஃபாசலின் மகளாகவும், அவள் தோடர்மல்லின் மகனான கமலை மணம் புரிவதாகவும், இருவரும் சேர்ந்து ஐரோப்பாவுக்கு யாத்திரை போகிறார்கள் என்றும் இருக்கிறது. இது வரலாற்றை உண்மையிலிருந்து வெகுதூரம் விலக்கிச் செல்வதாகும்.

இப்படிச் சில குறைகள் இருப்பினும், இந்தப் படைப்பு, அதன் திட்ட அமைப்பிலும் செயல்முறையிலும் விசேஷமான ஒரு சாதனை என்பதில் சந்தேகமில்லை. 8000 வருட வரலாற்றை வெகுவாக ரசித்துப் படிக்கக்கூடிய விதத்தில் 386 பக்கங்களில் சுருக்கித் தந்திருப்பது, ஒரு விமர்சகர் மற்றும் படைப்பு ஆசிரியரின் செறிவும் உறுதியும் நிறைந்த பார்வையை வெளிப்படுத்துகிறது. ஒரு கதாசிரியனின் திறமையும், வறண்ட விவரங்களை நேசிக்கும் ஒரு

வரலாற்றாசிரியனின் தன்மையும் அபூர்வமாக இணைந்து காணப் படுகிறது இதில். இந்தப் புத்தகம் விவாதத்தை எழுப்பியது. நக்னவாதி வேதநிந்தக ராகுல் (ராகுல் நிர்வாணத்தை ஆதரிப்ப வர், வேதங்களைப் பழிப்பவர்) என்று எவரோ அநாமதேய சுவாமிஜீ ஒருவர் விஸ்வபந்து சஞ்சிகையில் ஒரு கட்டுரையில் ராகுலை வசைபாடியிருந்தார். ஆனால் அதற்கு மிகுந்த புகழ் ஏற் பட்டுள்ளது. இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு வெகுகாலம் முன்னரே, வால்கா ஸே கங்கா, கார்க்கியின் தாய் மாதிரி, அனைத்து இந்திய மொழிகளிலும் ஏக காலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, பல பதிப்புகள் பிரசுரமான புத்தகங்களில் ஒன்றாகத் திகழ்ந்தது. ஆங்கிலம், ரஷ்யன், செக், போலிஷ் மற்றும் பல அயல்நாட்டு மொழிகளிலும் அது மொழிபெயர்க்கப்பட்டு, மிகப் பிரபலம் அடைந்தது. ராகுலின் எழுத்துக்களில், இந்த ஒரு புத்தகம், இந்தி மொழிக்கு மட்டுமின்றி இந்திய இலக்கியத்திற்கே வர லாற்றுப் பெருமை கொண்ட பங்களிப்பாக உயர்ந்து நிற்கிறது.

ராகுல் பிரேம்சந்த் பற்றி இப்படி எழுதினார்:

''நான் 1915-ல் அவர் பெயரைக் கேட்டிருந்தேன்; அவரது படைப்புகளைப் படித்திருந்தேன். ஆனால் வெகுகாலத்துக்குப் பின்னரே நான் அவரை சந்தித்தேன். அவருடைய எழுத்து நடையில் மிகப் பெரும் சிறப்பு ஒன்றிருந்தது. விமர்சகர்களும், அவரது சமகால இந்தி மற்றும் உருதுப் பண்டிதர்களும் அதை ஒரு குறையாகக் கருதினார்கள். அவருடைய எழுத்து நடை அவர் வாழ்க்கையைப்போலவே எளியதாக இருந்தது. தனது மொழியை அலங்காரம் பண்ணவோ, அதில் செயற்கைத்தனம் காட்டவோ அவர் ஒருபோதும் விரும்பியதில்லை. பெரும் அளவு மக்களின் பெரும் அளவு நன்மைக்காக (பகுஜன் ஹிதய, பகுஜன் சுகாய) அவர் எழுதினார். அனாவசியமான பண்டிதத்தனத்தைத் தன் மொழிமீது சுமத்த அவர் ஆசைப்பட்டதேயில்லை. நான் அவருடைய நூல்களின் கீர்த்தியை 1921-ல், மறுபடியும் ரேவதியா கிராமத்தில் கண்டேன். அங்குள்ள படிப்பறிவில்லாத மக்களைக் கூட அவை அடைந்திருந்தன. 1920லும் 1930லும், ஒத்துழை யாமை இயக்கத்தின் செய்தியைப் பரப்புவதற்கு அவருடைய எழுத்துக்கள் உதவிபுரிந்தன. நான் அவரை பனாரசில் 1926-ல் கண்டேன். பிரபல உருது எழுத்தாளர் ஒருவர் அவருடைய உரை நடையை 'பூரப் கி போலி' (கிழக்கத்திய பேச்சு வழக்கு) என்று கண்டனம் செய்தார். இக்கனவான் லக்னௌவில் மேன்மையான நவாப் குடும்பத்திலிருந்து வந்தவர். அவர் ஒரு நாவல் எழுதி யிருந்தால்—அல்லா அவருக்கு அருள்புரியட்டும்—குடியானவன் ஹோரி வாயிலிருந்து அரபுமொழி வெளிவரும்படி அவர் செய்

திருப்பார். ''ஓ பிரேம்சந்திடம் (சம்ஸ்கிருதமயமான) இந்தியின் செம்மையும் ஆழமும் இல்லை!'' என்று இந்திப் பண்டிதர்கள் சொன்னார்கள். இந்த இலக்கிய வகைக்கு, நாவலுக்கு, உருதுவை யும் இந்தியையும் உபயோகப்படுத்தும் களத்தில் அவர் ஒரு முன் னோடியாக இருந்தார். கடைசியாக நான் அவரை சாரநாத் அருகில் உள்ள அவருடைய பிறந்த ஊரில் சந்தித்தேன். இஸ்லாமிய காலத்துக்கு முற்பட்ட, அல்லது இஸ்லாமிய காலத்தின் ஆரம்ப நாட்களைச் சார்ந்த சிற்பத்தின் பழைய தலை ஒன்றை நான் கண்டெடுத்தேன். அதன் தலைமுடி அமைப்பிலிருந்து அது ஒரு காயஸ்தரின் உருவமாக இருக்கும் என்று தோன்றியது. அவ ருடைய மூதாதையரில் மிக முந்தியவர்களில் ஒருவரின் தலையாக இருக்கலாம் அது. நான் அதை பிரயாக் மியூசியத்துக்கு அனுப்பி னேன். அங்கே, ஒரு பாய்மீது உட்கார்ந்திருக்கையில், இதுதான் எங்கள் கடைசிச் சந்திப்பாக இருக்கும் என்று நான் எண்ணவே யில்லை. நான் திபெத்தில் அவரது மரணச் செய்தியைக் கேட் டேன். அன்று, அவருடைய நாவல்களில் உள்ள சிறந்த கதை மாந்தர் அனைவரும், பிரேம்சந்தின் சுய வெளிப்பாடுகள்போல எனக்குத் தோற்றம் காட்டினர். அவர் இந்தியாவின் சாகா வரம் பெற்ற எழுத்தாளர், கலைஞர் . . . நூற்றாண்டுகள் ஓடி மறையும். பிரேம்சந்தின் கற்பனை உலகம், இந்தியாவின் இன்றைய மாறிவரும் காலகட்டத்தை, தெளிவாகவும் உண்மையான வார்த்தைகளிலும் பதிவுசெய்து காப்பாற்றி நிற்கும்'' (ராகுல் நியந்தாவளி, பக்கங்கள் 7—9).

அவரது மத்திய ஆசியாவின் வரலாறு, இரண்டு பாகங்கள் தவிர மற்றொரு மாபெரும் சாதனை, உலக தத்துவங்களையும் இந்திய தத்துவ முறைகளையும் ஒப்பீடு செய்து ராகுல் எழுதிய நூல் ஆகும். பௌத்த சிந்தனை (100 பக்கங்கள்), இஸ்லாமிய சிந்தனை (125 பக்கங்கள்) பற்றி ஒரே புத்தகத்தில் இவ்வளவு விரி வாகவும் சிறப்பாகவும் சித்திரித்துக்காட்டும் நூல் இந்தியில் வேறு எதுவும் இல்லை.

அதன் நான்கு பக்க முன்னுரையிலிருந்து—முதலும் முடிவு மான—இரண்டு பாராக்களை எடுத்துச் சொல்லவேண்டும் என்கிற ஆசையை அடக்க இயலவில்லை. இம்முன்னுரை 1942-ல், ஹஜாரி பாக் மத்திய சிறையில் எழுதப்பட்டது. இம் மேற்கோள், வாழ்க் கையின்மீதும் உலகத்தின்மீதும் பொதுவாகவும், சிறப்பாக 1940கள் கால இந்தியாமீதும், ராகுல் கொண்டிருந்த தத்துவ ரீதி யான அணுகலின் சாரத்தைத் தருகிறது:

''பல கோடி வருடங்களாக மனிதன் பூமிமீது வசித்து வந்த போதிலும், அவனது அறிவு முன்னேற்றத்தின் மிக உயர்வான

மகிமை பொருந்திய காலம் கி.மு. 5000 முதல் கி.மு. 3000-க்கு உட்பட்டதேயாகும். மனித சமுதாயத்தின் தோற்ற அமைப்பை மாற்றிய விவசாயம், பாசனமுறை, ஞாயிறுபஞ்சாங்கம், மற்றும் இவை போன்ற முக்கியமான கண்டுபிடிப்புகளையும் அப்போது தான் அவன் செய்தான். அப்புறம், கி.பி. 1760க்குப் பின்னர் தான் மீண்டும் இத்தகைய அறிவார்ந்த வேகத்தை நாம் காண் கிறோம். நவீன கண்டுபிடிப்புகள் தொடர் சங்கிலியாகத் தொடங்குகின்றன அப்போது முதல் காலகட்டத்தில் தத்துவம் இருந்ததில்லை. இரண்டாவது கட்டத்திலோ, தத்துவம் தனது வயது எல்லையையும் மீறி உயிரோடிருக்கிற ஒரு கிழவன்போல் தோன்றுகிறது. அவன் அவனுடைய வயதுக்காக மதிக்கப்படு கிறான்; ஆனால், அவன் அறிவியலை — சோதனைரீதியாக உண்மைப் படுத்தப்பட்ட சிந்தனையை — தனக்குத் துணை கொள்கிறபோது தான் அவனுடைய வார்த்தைகள் மக்களின் கவனத்தைக் கவர் கின்றன. ஆனாலும், சர் ராதாகிருஷ்ணன் போன்ற பழைய வகை மத போதகர்கள் அதை ஒப்புக்கொள்வதில்லை; ''புராதன இந்தியாவில் தத்துவம் எந்தவொரு அறிவியல் அல்லது கலையின் கைப்பாவையாகவும் இருந்ததில்லை. ஆனால், சுதந்திரமான சுயேச்சை நிலைமையை அது பெற்றிருந்தது'' என்று சொல்கிறார் கள். எனினும், இந்தியாவில், தத்துவம் எப்போதும் மதத்துக்குப் பின்பாட்டு பாடிக்கொண்டுதான் இருந்தது.

''உலகளாவிய தத்துவ ஓட்டங்களை கவனித்துப் பார்த்த பிறகு, அவை தேசீயமாக இருப்பதைவிட அதிகம் சர்வதேசீயத் தன்மை பெற்றிருப்பதை ஒருவர் உணரமுடியும். ஒரு நாட்டின் ஒரு மதம் மற்றொரு மதத்தினிடம் காட்டுவதைவிட, ஒரு தத்துவ சிந்தனை இதர தத்துவங்களின் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதில் மிக அதிகமான தாராளத் தன்மை காட்டியுள்ளது. தத்துவ சிந்தனைகளின் பின்னால் பொருளாதாரத் தொடர்பு செயல்பட வில்லை என்று சொல்வது தவறும் பிழையும் ஆகும்; ஆயினும், மதங்களோடு ஒப்பிடுகையில், ஒரு நாட்டின் சுயலாப அக்கறைகளை இன்னொரு நாட்டின்மீது சுமத்த தத்துவங்கள் முயன்றதில்லை. ஆகவே, அறிவியல் துறை தவிர, வேறு எதிலும், தத்துவத்தில் காணப்படுவது போன்ற, கங்கையும் அமுவும் தாஸ்லாவும் (டைகிரிசும் யூப்ரட்டிசும்) இணைந்து ஓடும் மாபெரும் சங்கமத்தை யும், நளாந்தா, பொக்காரா, பாக்தாத், கார்டோவாவின் அன்பான கலவையையும் நாம் காணவில்லை. காலமும் வசதிகளும் போதுமானபடி இல்லாததனால், சைன மற்றும் ஜப்பான் தத்துவங் களை இத்தொகுப்பில் சேர்க்கமுடியாமல் இருப்பதற்காக நாம் வருந்துகிறோம். ஆனாலும், தத்துவத் துறையில் குறுகிய தேசீயத்

தைப் பரிந்து பேசுகிறவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதோடு, மற்றவர்களையும் ஏமாற்ற முயல்கிறார்கள் என்ற முடிவுக்கு வருவதில் நமக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை.''

(தர்ஸன் — திக் தர்ஸன், பக்கங்கள் 5ம் 8ம்)'

இந்திய மற்றும் புத்த தத்துவ சிந்தனைகளுக்கு மறுவிளக்கம் தருவதில் மட்டுமின்றி, இந்தோ — சோவியத் கல்வியியல் பரிமாற்றம் மற்றும் கலாசாரத் தொடர்புகள் ஏற்படுத்துவதிலும், முற்போக்கு சிந்தனை கொள்வதில் ராகுல் சாங்கிருத்யாயன் ஒரு முன்னோடியாக இருந்திருக்கிறார். மினாயேவ், பாரன்னிக்கோவ், ஷெர்பாத்ஸ்கி போன்ற இந்திய இயலாளர்கள் சோவியத் ரஷ்யாவில் செய்ததை, ராகுல் இந்தியாவிலிருந்து செய்தார். இந்தியாவின் ஆரம்பகால சோஷலிஸ்ட் சுயசிந்தனையாளர்கள், சோவியத் இயலாளர்கள் வரிசையில், ராகுலின் பெயர் எப்போதும் முதலாவதாக, முன்னணியில் நிலைபெற்றிருக்கும்.

மொழி, இலக்கியம் பற்றிப் பொதுவாகவும், இந்தி, தேவநாகரி எழுத்துக்கள் பற்றிக் குறிப்பாகவும் அவர் கொண்டிருந்த நோக்குபற்றி முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது. வட இந்தியாவில் மிகப் பெரும் கருத்து தொடர்பு சாதனமாக எளிய இந்தியை அவர் பரிந்துரைத்தார். ஆங்கிலம் அல்லது வேறு எந்த அந்நிய மொழியையும் அவர் எதிர்க்கவில்லை; ஆனால், இந்திய மொழிகள் மீது அவை காட்டுகிற ஆடம்பரப் போக்கையும் மேலாதிக்கத்தையும் அவர் எதிர்த்தார். அது இயற்கைக்கு மாறான நிலைமை என்பது அவரது கருத்து. எனினும், இந்தி இலக்கியத்தின் குறுகிய வரம்புகளை அவர் உணர்ந்தே இருந்தார். இந்தியில் நாடகம் (1948 வரை) மிகவும் வளர்ச்சி குன்றிய இலக்கிய வகையாக இருக்கிறது என அவர் நினைத்தார். அறிவியல் இலக்கியத்தில் இந்தி இதர மொழிகளைவிடப் பின்தங்கி நிற்கிறது. இந்தி இலக்கணத்தை எளிமைப்படுத்துவதை அவர் ஆதரித்தார். பாணினி தனது சம்ஸ்கிருத இலக்கணத்தில் 'அநேக உடிச்சி மற்றும் பிராதிசி வடிவ வேற்றுமைகளை' ஏற்றுக்கொள்ள நேரிட்டதை அவர் தனக்கு சான்றாக எடுத்துக்காட்டினார். தேவநாகரி எழுத்துக்களை மோனோ—லைன் அச்சமைப்புக்குஏற்றபடி மாற்றி அமைக்க வேண்டும் என்பதில் அவர் தீவிரமான ஆர்வம் கொண்டிருந்தார். இந்தியும் தேவநாகரியும் வெகுவேகமாக முன்னேறவேண்டும் என அவர் விரும்பினார்.

இலக்கிய விமர்சன விஷயங்களில், வளர்ச்சி பெற்றுவரும் மக்களின் பெருவாரியான தேவைகளை மையமாக்கி சமூக ரீதியில் பயன்படக்கூடிய முற்போக்கு இலக்கியத்தையே அவர் ஆதரித்தார். தந்தக் கோபுரத்திற்குள் அடங்கி, தேர்ந்தெடுத்த உயர்

வான ஒரு சிலருக்கு மட்டுமே உபயோகப்படக்கூடிய கலையையும் இலக்கியத்தையும் அவர் எதிர்த்தார். கவிதையிலும் கற்பனைப் படைப்புகளிலும் ஸ்தல வர்ணங்களும் வட்டார வழக்குகளும் இடம்பெறவேண்டியது அவசியம் என்று அவர் வலியுறுத்தினார். இதுபற்றி ஒரு இடத்தில் அவர் இவ்வாறு எழுதியுள்ளார்: ''இந்தி இலக்கியத்தில் பலவித மாறுபாடுகள் காணப்படுவதில்லை. ஏனெனில், இந்தி எழுத்தாளர்கள், அவர்கள் பீகாரின் நெல்வயல் கள் அல்லது சமவெளிகளிலிருந்து வந்தவர்களானாலும், கார்வாலின் பைன் மரங்கள் அடர்ந்த இமாலயப் பள்ளத்தாக்கு கள் அல்லது மலைப்பிரதேசங்களைச் சேர்ந்தவர்களாயினும், மார்வார் பாலைவனங்களையோ, ஜபல்பூரின் விந்தியமலைக் காடு களையோ சேர்ந்தவர்களாக இருப்பினும், எல்லோருமே எந்த ஸ்தலத்தின் காட்சிகளை அல்லது இயற்கை வர்ணனைகளைத் தங்கள் கவிதைகளிலும், உரைநடைப் படைப்புகளிலும் புகுந்து விட அனுமதிப்பதில்லை என்று மவுனமான ஒரு சதித்திட்டமும் ரகசிய ஒப்பந்தமும் செய்திருப்பதாகத் தோன்றுகிறது'' (சாகித்திய நிபந்தாவளி, பக். 9).

அவர் தெளிவான வார்த்தைகளில் சொல்லியிருக்கிறார்: ''ஒரு முற்போக்கு எழுத்தாளன் எந்த மத நம்பிக்கை அல்லது குறுகிய குழுவையும் சார்ந்தவன் இல்லை. மூடுண்ட பாதைகளைத் திறந்து அவற்றை விசாலப்படுத்துவதே முற்போக்கு இயலின் நோக்க மாகும். முற்போக்கு இயல் ஒரு கலைஞனின் சுதந்திரத்துக்கு எதிரி அல்ல; அவனுடைய அடிமைத்தனத்திற்கும் கட்டுண்ட நிலைக் குமே எதிரியாகும்.''

அவருடைய பார்வையில், முற்போக்கு எழுத்தாளன் மக்களின் எழுத்தாளனே யாவான். அவன் மக்களின் மொழியை உபயோ கிப்பான்; மக்களின் தேவைகளை எடுத்துச் சொல்வான். ''ஒரு எழுத்தாளன் மிகுந்த பலசாலி; மக்களுடன் சேர்ந்து போராடும் சகா. அவனே அவர்களின் தலைவனும்கூட. அவனே போர் வீரனாகவும் படைத்தளபதியாகவும் இருக்கிறான். ஆகவே, அவன் தன்னை எப்போதும் சாதாரண மனிதனோடு ஒருங்கிணைந்தவ னாகவே கருதவேண்டும்.''

இத்தகைய சிந்தனையாளர், இயல்பாக, 'கலை கலைக்காகவே' என்ற போக்கிற்கு எதிராக இருந்தார். மக்கள் கலை, மக்கள் இசை, மக்கள் நாட்டியம் ஆகியவற்றை அவர் ஆதரித்தார். நாட்டு மக்களின் கலை வடிவங்கள் வெறும் காட்சிப் பொருள் களாகவோ, நகர மக்களின் பொழுதுபோக்கு சாதனங்களாக மட்டுமோ இருப்பதை அவர் விரும்பியதில்லை. கலை, அவர் கருத் தின்படி, பயனுள்ளதாக இருக்கவேண்டும்; ஏழை எளியவர்களை

யும் அடக்கி ஒடுக்கப்பட்டவர்களையும் மேம்படுத்துவதும், ஒரு சிறந்த சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதற்கு அவர்களை இட்டுச் செல்வதும் அதன் பயனாக இருக்கவேண்டும்; அந்தப் புதிய சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் அதிகபட்ச வாய்ப்பும், தேவைகளிலிருந்து விடுதலையும் சித்திக்கும்.

கடைசியாக, புத்தரும் காந்தியும் என்ற அவருடைய கட்டுரையிலிருந்து சில மேற்கோள்கள் இங்கே தரப்படுகின்றன. (இதன் மூலப் பிரதி ஆங்கிலத்தில் எழுதப்பட்டது என்றும், துரதிர்ஷ்டவசமாக அந்த எழுத்துப் பிரதி தொலைந்துவிட்டது என்றும் புத்தகத்தில் உள்ள குறிப்பு அறிவிக்கிறது.) அது காந்தி கொலை செய்யப்பட்ட உடனே, 1948, ஆஜ்கல் என்ற இந்திப் பத்திரிகை பிரசுரித்த காந்தி விசேஷ மலரில் வெளி வந்தது. இதற்கு முன்பெல்லாம் காந்தியை மிகக் கடுமையாகவும், குறும்பாகவும் விமர்சித்து, நடைமுறைக்கு ஒவ்வாத கனவுவாதி என்றும், பெரும் தொழிலதிபர்களின் ஏஜன்டு என்றும், ஒத்துழையாமை பற்றி 'கனவு உலக நம்பிக்கை' கொண்டவர் என்றும் ராகுல் எழுதியுள்ளார். ஆனால், 1947 ஆகஸ்டு 15-க்குப் பிறகு, 1948 ஜனவரி 30-க்கு முன்னால், எழுதப்பட்ட இப் பாராட்டுரையில் அவருடைய கருத்து முற்றிலும் மாறிவிட்டது. இந்தியாவின் இரு பெரும் மனிதர்களையும் தெளிவாகப் புலன்படக்கூடிய முறையில் இதில் அவர் ஒப்பிட்டிருக்கிறார்:

''ஸப்பே சத்த பவன்து சுகி தத்தா—உயிர் வாழும் சகல ஜீவ ராசிகளும் சந்தோஷமாக இருக்கட்டும்—என்று புத்தர் உபதேசித்தார். ஆனால் அவர் ஒரு செயலூக்கம் இல்லாத வானம் பார்த்த நபர் அல்லர். அவர் யதார்த்தவாதி. எனவே செயற் களத்தில் பிரவேசிக்கும்படி அவர் தனது சீடர்களுக்கு வழி வகுத்துக் கொடுத்தார். மிகப் பெரும்பான்மையோருக்கு மிகப் பெரும் அளவு நன்மை செய்வதற்காக சுற்றித் திரியும்படி அவர்களை அவர் கேட்டுக்கொண்டார். மிகப் பெரும் அளவு நன்மையும் வெகு பேரளவு அக்கறைகளும் ஒரு சிலரது சந்தோஷங்களோடும் சுயலாப அக்கறைகளுடனும் அநேக முறைகள் மோதிக்கொள்ள நேரும் என்பதை அவர் அறிந்திருந்தார். சமூகம் முரண்பட்டு எதிர்க்கும் அக்கறைகள் பலவற்றைக்கொண்டு பிளவுபட்டிருந்தது. தனி நபர் சொத்து சேகரம் செய்வதும் பேராசையுமே துன்பத்தின் அடிப்படைக் காரணமாகும் என்று புத்தர் கருதினார். பேராசையிலிருந்து திருட்டு, சுரண்டல், கூட்டு ஒப்பந்தம் எல்லாம் உற்பத்தியாகின்றன. இத்தகைய சட்ட விரோதச் செயல்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவே மனிதன் உறவு முறை அமைப்பை உண்டாக்கினான். இந்த ஏற்பாட்டில்

இறுதிபூர்வமான பரிகாரம் இருப்பதாக புத்தர் கண்டாரில்லை. சந்நியாசிகள் மற்றும் சந்நியாசினிகளிடையே ஒரு சமத்துவ ஒழுங்கு முறையை அவர் உபதேசித்தார். அவர் தனது இறுதிச் செய்தியாக ந ஹி வீரென் வீரானி சமாந்தித் குதாச்சன் (பகைமையும் வன்முறையும் ஒருபோதும் விரோதத்தையும் வன்முறையையும் தணித்து விடாது) என்று கூறினுர்.

''யுத்தத்திற்குப் பிறகு, அமைதியின் இந்த மகத்தான செய்தியை உலகத்தாருக்கு அறிவித்த மாமனிதன் உலகத்திலேயே காந்தி தவிர வேறு எவருமிலர். புத்தரின் சுய தன்மை அவரிடம் இருந்ததில்லை. சந்தர்ப்பத்துக்குப் புறம்பாக நீக்கிவிடப்படுமாஞல், காந்தியின் சத்தியமும் அகிம்சையும் ஒரு தனி நபரின் பைத்தியக்காரத்தனமாகவே தோன்றும். ஆனுல் காந்தி உலக அன்பையும் சமாதானத்தையும் போதித்தார். இவ்வகையில் காந்தி புத்தரைவிட அதிகமாக வேதனைப்படவேண்டியிருந்தது என்றுகூட நான் சொல்வேன். கொலைகார வழிப்பறிக் கொள்ளைக் காரஞன அங்குலிமாலனின் சவாலை புத்தர் அச்சமின்றி எதிர் கொண்டார். ஆனுல், காந்தி, மற்றவர்களது, அநேக மனிதர்களின், உயிரைக் காப்பாற்றுவதற்காகத் துணிந்து தானே சுட்டெரிக்கும் நெருப்பினூடே பலமுறை குதித்தார். தென் ஆப்பிரிக்காவில் போயர் யுத்தத்தில் அவர் அப்படிச் செய்தார். அவர் தனது சோதனையை மறுபடியும் கல்கத்தாவிலும், டில்லியிலும், மற்றும் பல இடங்களிலும் சாதி ஒற்றுமையை நிலைநாட்டுவதற்காகச் செய்தார். இதெல்லாம் யாருக்குத் தான் தெரியாது? அவர் ஒரு மகாத்மாதான். அதில் எவ்விதமான சந்தேகமுமில்லை.

''காந்தி கடவுளிடமும், சமூகம் பற்றிய மாருத நோக்குடைய ஒரு தத்துவத்திலும் நம்பிக்கை கொண்டிருந்தபோதிலும், அவர் தனது தனி வழியில் செயலற்றவராக இல்லை. அவரும், புத்தர் போலவே, மிகப் பெரும்பாலானவர்களின் மிகப் பெரிய நலனுக்காக (பகுஜன்-ஹிதய்) வாழ்ந்தார். அவர் புத்த சமயத்தைத் தனது மதமாக ஏற்றுக்கொள்ளாமல் போனது பரிதாபத்துக்குரியது. ஆனுல், நெடுங்காலமாக ஒரு புதுவகை காந்தி வெளிப்பட்டு வருகிருர். அவர் அரசியல் விடுதலையில் மட்டும் திருப்தி அடையவில்லை. அதற்குப் பொருளாதார அடக்கமும் தர அவர் விரும்புகிருர். அப்போதுதான் உண்மையான சமூகப் புரட்சி வரும். புத்தரைப்போல, காந்தியும், ஒருசில உயர்ந்த வர்க்கங்களிடம் அல்லது சாதிகளிடம் அதிகாரம் குவிந்து கிடப்பதுதான் உண்மையான அபாயம் அல்லது சாபத்தீடு என உணர்ந்து வருகிருர். எனவேதான், உள்நாட்டு ராஜாக்களின் தன்னிச்சையான,

அநியாயமான ஆட்சி முறையை அவர் பூசி மெழுகாத வார்த்தைகளில் கடுமையாகக் கண்டித்துக்கொண்டிருக்கிறார். அவர் சோஷலிசம் பற்றியும் பேசுகிறார்; ஆனால் சத்தியத்தையும் அகிம்சையையும் மிக அதிகமாக வலியுறுத்துகிறார். உண்மையான சோஷலிஸ்ட் எவனும் சத்தியத்தின் விரோதியாக இருக்கமுடியாது; எந்த ஒரு சோஷலிஸ்டும் வன்முறையை வன்முறைக்காக விரும்புவதும் இல்லை. உண்மையில், ஒரு சோஷலிஸ்ட் அல்லது கம்யூனிஸ்ட் தற்காப்புக்காக மட்டுமே வன்முறையை ஆதரிக்கிறான்; அதுவும், இதர எல்லாவித அமைதியான எதிர் தாக்குதல் முறைகளும் தோல்வி அடைந்த பிறகு, அல்லது கட்டுப்படுத்தப்பட்ட பிறகே, வன்முறை கட்டவிழ்த்து விடப்பட்ட நிலையில்தான், வன்முறையை ஆதரிக்கிறான்.

''வருங்காலத்தில், முதலாளித்துவ ஏகபோகவாதிகளையும், கட்டுப்பாடில்லாத உயர் வர்க்கங்களைச் சேர்ந்த அவர்களது சட்ட விரோதமான உதவியாளர்களையும் எதிர்த்து, மாபெரும் போராட்டம் ஒன்று துவங்கப்படும். வர்க்கக் கொடூரங்களைவிட அகிம்சையின் சக்தி மிக வலிமையானது என நான் உறுதியாக நம்புகிறேன். காலாவதியாகிப்போன நிலப்பிரபுத்துவத்தை, ஒரு சொட்டு ரத்தமும் சிந்தாமல், காந்தி ஒழித்துக்கட்டுவார். நமக்கு மிகக் குறைவான காலமே இருக்கிறது. அவர் நீண்ட ஆயுளுடன் இருக்கவேண்டும் என நாம் விரும்புகிறோம். எனினும் அவருடைய கால அளவுக்கும் ஒரு வரம்பு உண்டு. அவர் நமக்கு அரசியல் சுதந்திரம் பெற்றுத் தந்தார். பொருளாதார சமத்துவத்திற்கும் அவரே நம்மை இட்டுச் செல்லட்டும். இக் கடமையில் அவர் வெற்றிபெற்றால், வரலாறும் மனிதகுலமும் என்றும் அவரை நினைவில் நிறுத்திப்போற்றும். அப்போது அவர் புத்தரைவிடப் பெரியவராக விளங்குவார்.''

(அதித் ஸே வர்த்தமான், பக்கங்கள் 120-23)

# அனுபந்தம்-1

## ராகுல் வாழ்க்கையில் முக்கிய நிகழ்ச்சிகள்

*9 ஏப்ரல் 1893* — யு. பி. மாநிலம் ஆஜாம்கார் மாவட்டத்தில் பாந்தகா எனும் பாட்டன்மார் கிராமத்தில் பிறந்தார். தந்தை கோவர்தன் பாண்டே. தாய்: குலவந்தி தேவி. நான்கு சகோதரர்கள், ஒரு சகோதரியிடையே மூத்தவர். பெயர்: கேதார்நாத் பாண்டே.

*1912–13* — பராசா மடத்தில் சாது ஆகவும், மடாதிபதி வாரிசு ஆகவும் இருந்தார்.

*1913–14* — தென்திசை யாத்திரை.

*1922* — பக்சார் சிறையில் ஆறு மாதங்கள். ஜில்லா காங்கிரஸ் செயலாளர்.

*1923–25* — ஹஜாரிபாக் சிறையில்.

*1927–28* — ஸ்ரீலங்காவில் சம்ஸ்கிருத ஆசிரியர். புத்த சமய இலக்கியப் பயிற்சி.

*1929–30* — திபெத்தில் ஒன்றேகால் வருடம்.

*1932–33* — இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும்.

*1934* — திபெத்துக்கு இரண்டாவது பயணம்.

*1935* — ஜப்பான், கொரியா, மஞ்சூரியா, சோவியத் ரஷ்யா, ஈரான் பயணம்.

*1936* — திபெத்துக்கு மூன்றாவது பயணம்.

*1937* — சோவியத் ரஷ்யாவுக்கு இரண்டாவது பயணம்.

*1938* — திபெத்துக்கு நான்காவது பயணம். இகார் பிறப்பு.

*1939* — அமாவரியில் கிசான் சத்தியாக்கிரகம் சிறைவாசம்.

*1940–42* — ஹஜாரிபாக் சிறையிலும் தேவ்லி பாதுகாப்பு முகாமிலும்.

1943 — முப்பத்துநான்கு வருடங்களுக்குப் பிறகு, பிறந்த ஊருக்கு வருகை. அவருடைய முதல் மனைவி அவரை சந்திக்க வருகிறாள். உத்தர்கண்டுக்குப் பயணம்.

1944–47 — சோவியத் ரஷ்யாவில் லெனின்கிராட் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்.

1947–48 — அலாகாபாத் இந்தி சாகித்திய சம்மேளனம் தலைவர்.

1950 — மசூரியில் சொந்த வீடு வாங்குதல். பின்னர் அதை விற்றல்.

1953 — மகள் ஜயா பிறப்பு.

1955 — மகன் ஜேடா பிறப்பு.

1958 — மக்கள் சீனத்தில் நாலரை மாதங்கள்.

1959–61 — ஸ்ரீலங்காவில் தத்துவப் பேராசிரியர்.

டிசம்பர் 1961 — தனது ஞாபகசக்தியை இழந்தார்.

1962–63 — சிகிச்சைக்காக சோவியத் ரஷ்யாவில் ஏழு மாதங்கள்.

14 ஏப்ரல் 1963 — மரணம்.

## ராகுல் சாங்கிருத்யாயன் பெற்ற பட்டங்கள்

1. மகாபண்டிதா — காசி பண்டிதர் சபை.
2. திரிபிடகாச்சார்யா — வித்யாலங்கார பரிவீணு, ஸ்ரீலங்கா.
3. சாகித்திய வாசஸ்பதி — இந்தி சாகித்திய சம்மேளனம், அலகாபாத்.
4. டி. லிட். (ஹான.) — பாகல்பூர் பல்கலைக் கழகம், பாகல்பூர்.
5. டி. லிட். (ஹான.) — வித்யாலங்காரப் பல்கலைக் கழகம், ஸ்ரீலங்கா.
6. பத்ம பூஷண் — இந்திய அரசு.

# அனுபந்தம்-2

## ராகுல் சாங்கிருத்யாயன் படைப்புகள்

## இலக்கியம்

### இந்தி

**நாவல்கள்**

1. *பய்ஸ்வின் சாதி 1923?*
2. *ஜினெ கே லியே 1940*
3. *சிம்ஹ சேனாபதி 1944*
4. *ஜெய் யவ்தேயா 1944*
5. *பாகோ நஹீன், துனியா கோ பாத் லோ 1944*
6. *மதுர் ஸ்வப்ன 1949*
7. *ராஜஸ்தானி ராணிவாஸ் 1953*
8. *விஸ்ம்ரித் யாத்ரி 1954*
9. *திவாதாஸ் 1960*

**சிறுகதைகள்**

10. *சாத்மி கே பச்சே 1935*
11. *வால்கா ஸே கங்கா 1944*
12. *பகுரங்கி மதுபுரி 1953*
13. *கனெய்லா கி கதா 1955–56*

**சுயசரிதை**

14. *மேரி ஜீவன் யாத்ரா (5 பாகங்கள்)*
    I–*1944*, II–*1950*

*(3 பாகங்கள் அவரது மரணத்திற்குப்பின் பிரசுரமாயின.)*

வாழ்க்கை வரலாறு

15. சர்தார் பிருத்வி சிங் 1955
16. நயே பாரத் கே நயா நேதா 1942 (2 பாகங்கள்)
17. பச்பன் கி ஸ்மிரிதியான் 1953
18. அதித் ஸே வர்த்தமான் (முதல் பாகம்) 1953
19. ஸ்டாலின் 1954
20. லெனின் 1954
21. கார்ல் மார்க்ஸ் 1954
22. மா-சே-துங் 1954
23. கூமாக்கார் ஸ்வாமி 1956
24. மேரா ஆஷாயோக் கே ஸாதி 1956
25. ஜின்கா மேய்ன் கிரிதாஜ்ஞ 1956
26. வீர் சந்திரசிங் கார்வாலி 1956
27. சிங்கள கூமாக்கார் ஜெய்வர்தன் 1960
28. கப்தான் லால் 1961
29. சிங்கள கே வீர் புருஷ் 1961
30. மகா மானவ் புத்த 1956

பயண நூல்

31. மேரி லடாக் யாத்ரா 1926
32. லங்கா 1926—27
33. மேரி யுரோப் யாத்ரா 1932
34. மேரி திபெத் யாத்ரா 1937
35. யாத்ரா கே பன்னே 1934—36
36. ஜப்பான் 1935
37. ஈரான் 1935—36
38. ரூஸ் மே பச்சீஸ் மாஸ் 1944—47
39. கின்னர் தேஷ் 1948
40. திபெத் மே ஸவா வர்ஷ் 1931
41. கூமாக்கார் சாஸ்த்ரா 1949
42. ஆசியா கே துர்காம் பூ—கந்தோன் மே 1956
43. சீன் மே க்யா தேக்கா? 1960

கட்டுரைகள்

44. சாகித்ய நிபந்தாவளி 1949
45. புரதத்வ நிபந்தாவளி 1936
46. திமாகி குலாமி 1937
47. துமாரி க்ஷாயா 1937
48. ஆஜ் கி சமஸ்யாயன் 1944
49. ஸாம்யவாத் ஹி க்யோன்? 1934
50. அதித் ஸே வர்த்தமான் (2-ம் பாகம்) 1953

போஜ்புரி

51. தீன் நாடக் 1942
52. பாஞ்ச் நாடக் 1942

திபெத் மொழி

53. திபெத்தி பால் சிக்ஷா 1933
54. பதாவளி (1,2,3 பாகங்கள்) 1933
55. திபெத்தி வியாகரண் 1933

## இதர நூல்கள்

## இந்தி

அறிவியல்

1. விஸ்வ கி ரூப்ரேகா 1942

சமூகவியல்

2. மானவ் சமாஜ் 1942

அரசியல்

3. சோவியத் நியாய 1939
4. ராகுல்ஜி கா அப்ராத் 1939
5. ஆஜ் கி ராஜ்நீதி 1949
6. கம்யூனிஸ்ட் க்யா சாஹ்தே ஹைஹன்? 1953
7. க்யா கரேன்? 1937

8. சீன் மே கம்யூன் 1960
9. சோவியத் கம்யூனிஸ்ட் பார்டி கா இதிஹாஸ் 1939
10. ராம்ராஜ்யா அவுர் மார்க்ஸ்வாத்

தத்துவம்

11. வைஞ்ஞனிக் பௌதிக்வாத் 1942
12. தர்சன்—திக்தர்சன் 1942
13. பௌத்த தர்சன் 1942

சமயம்

14. புத்த சார்யா 1930
15. தம்மபத 1933
16. மாஜ்ஹிம— நிகாய 1933
17. விநய பீடக 1934
18. தீர்க நிகாய 1935
19. திபெத் மே பௌத்த தர்ம 1935
20. பௌத்த சன்ஸ்கிருதி
21. இஸ்லாம் தர்ம கி ரூப்ரேகா 1923

பயண நூல்

22. சோவியத் பூமி
23. சோவியத் மத்ப ஆசியா
24. டார்ஜீலிங் பரிச்சய 1950
25. குமாயுன் 1951
26. கார்காவால் 1952
27. ஜாவ்ன்சார்—டேராதுன் 1955
28. ஆஜாம்கார் கி புராகதா
29. இமாசல் பிரதேஷ் 1954 (பிரசுரமாகவில்லை)
30. நேப்பாள் 1953

அகராதி மற்றும் லெக்சிகன்

31. ஷாஸன்—ஷப்த—கோஷ் 1948
32. திபெத்தி—இந்தி கோஷ் (முதல் பாகம்) 1974

இலக்கிய வரலாறு

33. இந்தி காவ்யதாரா (அபபிரம்ஷா) 1944
34. தாக்கினி காவ்யதாரா 1952

நாட்டார் பாடல்

35. *ஆதி இந்தி கி கஹானியா அவுர் கீதன் 1950*

ஆய்வு

36. *சாராஹ்பாத் கிரித் தோகா கோஷ் 1954*

வரலாறு

37. *மத்ய ஆசியா கா இதிகாச (1,2 பாகங்கள்) 1952*
38. *ரிக்வேதிக் ஆரிய 1956*
39. *அக்பர் 1956*
40. *பாரத் மே ஆங்ரேஸி ராஜ்ய கா ஸன்ஸ்தாபக் 1957*
41. *பாலி சாகித்ய கா இதிகாஸ்*

தொகுப்பு

42. *துளசி ராமாயண் சங்க்ஷேப் (தொகுத்தது) 1957*
43. *சூத்ர கிரிதங்கா (பதிப்பித்தது) சம்ஸ்கிருதம்*
44. *சம்ஸ்கிருத காவ்யதாரா 1955 சம்ஸ்கிருதம்*
45. *பாலி காவ்யதாரா (வெளிவரவில்லை) பாலி*

மொழிபெயர்ப்பு

46. *சைத்தான் கி அங்க் 1923*
47. *விஸ்மிரிதி கி கர்ப் மே 1923*
48. *ஜாடு கா முல்க் 1923*
49. *ஸோனே கி தள் 1923*
50. *தாகுந்தா 1947*
51. *ஜோ தாஸ்தே 1947*
52. *அநாத் 1948*
53. *ஸன்விதான் கா மஸவ்தா 1948*
54. *ஆதிஞ 1951*
55. *சுத்கோர் கி மௌத் 1951*
56. *ஷாதி 1952*

சம்ஸ்கிருதம் பதிப்பித்தல், மொழிபெயர்ப்பு மற்றும் ஆய்வு

57. *சம்ஸ்கிருத பதமாலா (5 பாகங்கள்) 1928*
58. *அபிதர்ம கோஷ் 1930*
59. *விஜ்ஞப்திமாத்ரத சித்தி 1934*

60. ஹேது பிந்து 1944
61. சம்பந்த பரிக்க்ஷா 1944
62. நிதான—சூத்ர (பரிக்க்ஷா) 1951
63. மகா பரிநிர்வாண சூத்ர 1951
64. வாத—நியாய
65. பிரமாண—வார்திக 1935
66. பிரமாண—வார்திக பாஷ்ய 1935—36
67. பிரமாண—வார்திக விருத்தி 1936
68. பிரமாண—வார்திக ஸ்வவிருத்தி 1936
69. பிரமாண—வார்திக—ஸ்வவிருத்தி—திகா 1937
70. அத்யார்த்த—சாதக 1935
71. விக்ரக வியாவர்த்தினி
72. விநய சூத்ர 1943

## இதர மொழிகளில் கிடைக்கும் ராகுலின் படைப்புகள்—மொழிபெயர்க்கப்பட்டவை

1. சிம்க சேனபதி — உருது, மராத்தி, குஜராத்தி, தெலுங்கு
2. ஜெய் யவ்தேயா — மராத்தி, குஜராத்தி
3. வால்கா ஸே கங்கா — உருது, சிந்தி, குஜராத்தி, மராத்தி, கன்னடம், மலையாளம், தமிழ், தெலுங்கு, ஓரியா வங்காளி, அசாமி, நேப்பாளி, பர்மியம், ஆங்கிலம், ரஷியன்
4. மதுர் ஸ்வப்ன — குஜராத்தி
5. சர்தார் பிருத்விசிங் — மராத்தி, குஜராத்தி
6. வைஞானிக் பௌதிக்வாத் — வங்காளம்
7. தர்சன் திக்தர்சன் — வங்காளம், மலையாளம்
8. திபெத் மே ஸேவா வர்ஷ் — வங்காளம்
9. பய்ஸ்வின்—ஸாதி — உருது, குஜராத்தி, மராத்தி
10. ஸாக்யவாத் ஹி க்யோன்? — உருது, தமிழ்
11. மானவ சமாஜ் — வங்காளம், குஜராத்தி
12. விஸ்வ கி ரூப்ரேகா — மலையாளம்
13. சம்ஸ்கிருத் பதமாலா — சிங்களம்

---

புகழ் பெற்ற வரலாற்று ஆசிரியர் காசிபிரசாத் ஜெய்ஸ்வால், ராகுல் சாங்கிருத்யாயனை புத்தருடன் ஒப்பிட்டார். ராகுலின் ஆளுமை, அவரது சாதனைகளைப்போலவே, நினைவில் பதியக் கூடியதும் மறக்கமுடியாததும் ஆகும். அவர் பரந்த பயணங்களை மேற்கொண்டார். இந்தி, சம்ஸ்கிருதம், போஜ்புரி, பாலி, திபெத் ஆகிய ஐந்து மொழிகளில் எழுதினார். சுயசரிதை, வாழ்க்கை வரலாறு, பயண நூல், சமூக இயல், வரலாறு, தத்துவம், புத்த தர்மம், திபெத் — இயல், அகராதி தயாரிப்பு, இலக்கணம், மூலநூல் பதிப்பித்தல், ஆய்வு, நாட்டியல் கலைகள், அறிவியல், கற்பனைப் படைப்பு, நாடகம், அரசியல் மற்றும் துண்டுப் பிரசுரங் களுக்குக் கட்டுரைகள் என அவர் வெளியிட்டுள்ள நூல்கள் பலவகைப்பட்டன ஆகும்.

பிரபாகர் மாச்வே 1944ல் ராகுல் சாங்கிருத்யாயனோடு நெருங்கிய தொடர்புகொண்டார். 1963ல் ராகுல் மரணம் அடைகிற வரையில் அவருடைய நண்பராக இருந்தார். இந்த வர லாற்றில், மாச்வே ராகுலின் வாழ்க்கைச் சுருக்கத்தைத் தருவ துடன், இந்திய இலக்கியத்தில் ராகுலின் சாதனைகளை நாம் அறிந்து பாராட்டுவதற்கும் ஆவன செய்துள்ளார்.

அட்டை அமைப்பு: சத்தியஜித் ரே

உருவ ஓவியம்: எ. தெவசி

ரூ. 5